உ

ஸ்ரீ ராமஜெயம்

509

# அன்னை தமிழளித்த அருந்தெய்வீக வாழ்வு

(58 வருட தமிழ்ச் சேவை)




ஸ்ரீ ராமகதாரத்ன வே. தியாகராஜன்

(சேவைகள் பற்றிய விவரங்கள்)

போன் : 2331095

தந்தி : ராமகதா - சென்னை-61.

ஸ்ரீ ராமகதா நிலையம்

17, 27வது தெரு, தில்லை கங்கா நகர்,

சென்னை-61,

2001

உ

## நல் வாழ்த்துக்கள்

எங்கள் குடும்ப நண்பர் ஸ்ரீ ராமகதா அவர்கள் 400 ஸ்ரீ ராம பட்டாபிஷேகங்கள் விரைவில் பூர்த்தி செய்யவும், அன்னார் மேலும் தெய்வீகச் செய்திகளைப் பரப்பவும், நற்காரியங்களுக்கு உதவவும், அருள்புரிய முருகப் பெருமானை வேண்டுகிறோம்.



8 ப/2

# அன்னை தமிழளித்த அரும் பெரும் தெய்வீக வாழ்வு

இவ்வுலகில் மனிதன் அழியாது என்றும் வாழ ஒரு மருந்து உண்டு. அதை நம் முன்னோர்கள் அமிர்தம் என்பர். அதைச் செந்தமிழில் "அமிழ்து" என்பர். அமிழ்து என்ற சொல்லை திரும்பத் திரும்பச் சொல்லி கொண்டே வந்தால் அது "தமிழ்" என்று நம் தாய் மொழியின் பெயராக வந்துவிடும், "ஆதியில் உலகம் முழுவதும் அமிழ்து என்னும் தமிழ் மொழி என்ற பழைய தமிழ்த் தாய் வாழ்த்தும், "தமிழுக்கு அமுதென்று பேர்" எனச் சமீபக்காலப் புலவர் பெருமானும் கூறிப் போந்தனர்.

அத்தகைய தமிழன்னை தன்னை நம்பினோருக்கு நல்வாழ்வு நல்குவாள் என்பதற்கு மிகச்சிறியவனான அடியேனையே எடுத்துக் காட்டாகக் கொள்ளலாம். சேரநாட்டுக் கோயம்புத்தூரில் பிறந்து பாண்டியநாட்டுத் தலை நகரான மதுரையிலே வளர்ந்து கல்வி கற்று, மதுரை ஸ்ரீ மீனாட்சி சுந்தரேசுவரர்கள் அருளாலும், அடியேனது வித்யாகுரு. மதுரை பிரபல, வக்கீல் ஸ்ரீ தார்மீகரத்னப்பிரதீப, உ.வே. N.R. கிருஷ்ணசுவாமி ஐயங்கார் அவர்களின் ஆசியாலும் சோழ நாட்டுப் பெரும்புலவர் கவிச்சக்ரவர்த்தி கம்பர், பரஞ்சோதி, தொண்டைநாட்டு மகாகவி சேக்கிழார் பெருமான் முதலானவர்களின் நூல்களையும் பயின்றேன். நாட்டுக் கோட்டை நகரத்தார்கள் காட்டிய அதீத அன்பினால் அவர்களுககு அருகாமையில் புதுக்கோட்டையில் சுமார் 30 வருடஙகள வசிததேன். தற்சமயம் சென்ற 20 வருடங்களாகச் சென்னையில் வசித்து வருகிறேன். வாழ்க்கை பூராவும் தமிழ் என்னைச் சிறப்பாக வாழ வைத்துள்ளது, "இருந்தமிழே உன்னால் இருந்தேன் இமையோர் விருந்தமிழ்தம் என்றாலும் வேண்டேன்" என்று தமிழ்விடுதூது நூலிலுள்ள வரிகள் எனக்காகவே பாடப்பட்டனவோ என நான் எண்ணுவதுண்டு. இறைவனது நினைவிலேயே வாழ்ந்தேன் என்பதை

தரித்திருந்தேனாகவே தாராகணப் போர்
விரித்துரைத்த வெந்நாகத்துன்னை-தெரித்தெழுதி
வாசித்தும், கேட்டும், வணங்கி வழிபட்டும்
பூசித்தும் போக்கினேன் போது

என்று திருமழிசைப் பிரான் கூறிய பேற்றை இறைவன் சென்ற ஐம்பத்திஎட்டு வருடங்களுக்கு மேலாக அடியேனுக்கு அளித்திருப்பதை எண்ணிப்பாடிக் கொண்டேயிருக்கிறேன் கீழ்க்கண்ட பாடலின், மூலம்.

யானே தவம் செய்தேன்: ஏழ்பிறப்பும் எப்பொழுதும்
யானே தவமுடையேன்: எம்பெருமான்-யானே
இருந்தமிழ்நன் மாலை இணையடிக்கே சொன்னேன்
பெருந்தமிழன் நல்லேன் பெரிது.

இறைவனது திருவருளும் தமிழன்னையின் கருணையும், அடியேன் நாடெங்கும் பிரயாணம் செய்து நம் தெய்வீகத்தமிழ் நூல்களின் செய்திகளைப் பரப்பிவாழச் செய்தன. இத்தகைப் பெரும்பேறு என் குலகுருவான ஸ்ரீ ஸ்ருங்கேரி ஸ்ரீ சாரதாபீடம் மகாசன்னிதானம் அவர்களுடையவும், பல வருடங்களாக அடியேனுக்கு ஆசிகூறி வரும் ஸ்ரீ காஞ்சிகாமகோடி பீடம் பெரியவர்களுடையவும் ஆசிர்வாத அனுக்ரகங்களே காரணமாகும். தமிழ்த்தாத்தா டாக்டர். ஸ்ரீ.உ.வே. சுவாமிநாதய்யரவர்களின் வித்யாகுருவான மகாவித்வான் திரிசிரபுரம் மீனாட்சி சுந்தரம்பிள்ளையவர்கள் கம்பராமாயணப் பாடல்கள் பூராவையும் மூன்று முறைகள் தம்கைப்பட எழுதினார் என்பது வரலாறு அம்முறையில் கம்பராமாயணம், திருவிளையாடற்புராணம், நாலாயிரதிவ்யப் பிரபந்தம் ஆகிய மூன்று தெய்வீக நூல்களையும் அடியேன் கைப்பட எழுதி பைண்டு செய்து பூஜையில் வைத்து வணங்கி வருகிறேன். இராமாயணக் காட்சிகளை சுமார் 30 படங்களில் சுவற்றில் மாட்டி வைத்து அவைகளின் நடுவே அமர்ந்து நல்ல நூல்களை படித்து இன்புற்று வருகிறேன். கம்பன் தனது காவியத்தை திருவரங்கம், சிதம்பரம் சன்னிதிகளில் அரங்கேற்றம் செய்தான் என்பது வரலாறு. அடியேனது இல்லத்தில் திருவரங்கப் பெருமானுக்கும் தில்லை நடராசப் பெருமானுக்கும் இடையே கம்பர் பெருமானின் சிலையை எழுந்தருளச் செய்து அந்த சன்னிதியை தினமும் வணங்கிக் கொண்டே வாழ்ந்து வருகிறேன்.

1943ம் வருடம் தற்செயலாக மதுரை வைகை நதியில் நீராடும் போது கம்பன் காவியத்தை 108 முறைகள் சொற் பொழிவாற்றுவதாகப் பிரதிக்ஞை எடுத்துக் கொண்டு, மேற்படி 108 வது பட்டாபிஷேகம் கல்கத்தா பாரதி தமிழ்ச் சங்கத்தில் 24.6.1956 பூர்த்தியாயிற்று. அடியேனது 105 வது இராமாயணச் சொற்பொழிவு ரிஷிகேசம் சிவானந்தாஸ்ரமம் ஸ்ரீ. சிவானந்த சுவாமிகள் திருமுன்னர்

நடைபெற்று 2.5.1956 அன்று பூர்த்தியான போதே, இரண்டாவது 108 பட்டாபிஷேகங்கள் செய்வதாக கங்கை நதிக் கரையில் பிரதிக்ஞை எடுத்துக் கொண்டு, அது அரக்கோணம் திவ்ய ஜீவன சங்கத்தின் ஆதரவில் 13.6.1967 பூர்த்தியாயிற்று. எனது தாயகமான கோவை ஜில்லாவில் பவானி–காவிரி–அமிர்தா நதிகள் கூடுமிடமான பவானியில் மூன்றாவது முறை 108 ஸ்ரீ ராமபட்டாபிஷேகங்கள் செய்வதாகப் பிரதிக்ஞை எடுத்துக் கொண்டு மேற்படி 324 வது சொற்பொழிவு 11.8.1982 அன்று சென்னை ராஜா அண்ணாமலைபுரம் ஸ்ரீ ஸ்ருங்கேரி பிரவசன மந்திரத்தில் தர்மாத்மா. ஸ்ரீ. V. வைத்ய சுப்ரமணிய ஐயரவர்களின் ஆதரவில் பூர்த்தியாயிற்று.

உடல் தளர்ச்சி ஏற்பட ஆரம்பித்துள்ளதன் காரணமாக நான்காவது பிரதிக்ஞை எடுத்துக் கொள்ளவில்லை. இறைவன் திருவருள் உள்ள மட்டும் நடைபெறட்டும் என எண்ணி 400 பட்டாபிஷேகங்களாவது நடைபெற அருளுமாறு இராமபிரானை வேண்டிக் கொண்டுள்ளேன். இராமாயணம் நூற்றுக்கணக்கான முறைகள் செய்துள்ள போதிலும் மற்றைய நூல்களையும் இறைவன் திருவருளால் கற்றுள்ளேன். என்னிடம் சொந்தமாக மிகப் பெரிய புத்தகசாலை உள்ளது. எனவே அன்பர்கள் எந்தத் தலைப்பில் வேண்டுமானாலும் அடியேனைப் பேச அழைக்கலாம். முன்கூட்டி எழுதியருள வேண்டுகிறேன். இதுவரை நம் சொற்பொழிவுகள் நடைபெற்ற இடங்கள், பெற்ற பட்டங்கள், மற்றைய சிறப்புகள் பூராவும் இப்புத்தகத்தில் விவரமாகக் கொடுக்கப்பட்டுள்ளன.

## 2. வீடுதோறும் தெய்வீகக் கலையின் விளக்கம்

மிகப் பொறுப்புகளிலிருந்து தெய்வீகச் சொற்பொழிவுகளுக்கு வர இயலாதவர்கள், FLATகளில் வசிக்கக் கூடியவர்கள், இரவு நேரத்தில் வெளியில் வர முடியாதவர்கள், உடல் நலமில்லாது, நோய் காரணமானவர்கட்கும், மற்றும் வீடுகளில் சுபகாரியங்கள் தடங்கல் முதலான வேதனைகளையும் நீக்க வீடுகளுக்கே வந்து சிவ பரமானால் 4 நாட்கள் (3 நாட்கள் கந்தரநுபூதி 1 நாள் மீனாட்சி கல்யாணம்) விஷ்ணுபரமானால் (ஒரு நாள் குசேலர் சரிதம் +3 நாள் சுந்தரகாண்டம்) சொற்பொழிவு செய்யலாம். பல அன்பர்களுக்கு தமிழ் நூல்களைக்

கற்பித்து மேடையேற உதவுகிறோம். 18 வயதிற்குமேற்பட்டவர் யார் வேண்டுமானாலும் பயிற்சி பெறலாம். சிவராத்ரி– வைகுண்ட ஏகாதசி தினங்களில் இரவு 10 மணிமுதல் காலை 5 மணி வரை சொற்பொழிவு செய்யலாம். இதன் மூலம் வரும் சம்பாவனைத் துகைகள் நற் காரியங்களுக்குப் பயன்படுத்தப் பெறும். வெளியூர்களில் நம் சொற்பொழிவுகள் நடக்கும் போது அந்தந்த ஊர்களில் அன்பர்கள் நம் சேவையைப் பயன்படுத்திக் கொள்ளலாம்.

## 3. தெய்வங்களின் அருள்

அடியேனது 86 வது இராமாயணச் சொற்பொழிவு திருவரங்கம் பெரிய கோவிலுள்ள சந்திர புஷ்கரணிக் கரையிலுள்ள ஸ்ரீ ராமபிரான் சன்னிதியில் 22.11.54 முதல் 7.12.54 வரை நடைபெற்றது. ஒரு சால்வை போர்த்தினார்கள. அதுவே முதல் சால்வை, ஸ்ரீ ரங்கநாதப் பெருமானின் திருக்கருணையைப் பெற்று முன்னுக்கு வர ஆரம்பித்து நல்ல நிலையிலுள்ளேன். இதுவரை 15 புத்தங்கள் எழுதியுள்ள அடியேன் திருவரங்கப் பெருமானின் மகிமை பற்றி ஒரு புத்தகம் எழுத ஆசையுடையேன். அப்பெருமான் நிறைவேற்றி வைக்க வேணும்.

## 4. தில்லைநாயகன் திருக்கருணை

1. சிதம்பரம் திவ்ய ஜீவன சங்கத்தில் நம் 101–வது ராமாயணச் சொற்பொழிவு 5.2.56 முதல் 19.2.56 வரை நடைபெற்ற போது கம்பன் அபிநவகாளமேகம் எனப் பட்டமளித் தருளினர்.

2. சிதம்பரத்தில் 16.6.1968 அன்று முடிவடைந்த 226 வது பட்டாபிஷேகத்தில் ஸ்ரீ சபாநாயகர் கோயில் சார்பாக பொன்னாடை போர்த்தப்பட்டது.

3. சிதம்பரத்தில் நடைபெற்ற 226 வது ராமாயண நிகழ்ச்சியின் நடுவில் 13.6.1968 புராணக் குழுவினரால் தங்கப் பதக்கம் அளிக்கப்பெற்றது.

4. சிதம்பரத்தில் 8.4.72 அன்று நிறைவேறிய 255 வது பட்டாபிஷேகத்தில் Dr.திரு. அரங்கசுவாமி அவர்களால் பொன்னாடை போர்த்தப்பட்டது.

5+6. சிதம்பரம் சபாநாயகர் கோவில் பூஜ்ய ஸ்ரீ தில்லைவாழ் அந்தணர்கள் சார்பில் ஒன்றும், வக்கீல் பூஜ்ய ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி ஐய்ரவர்கள் குடும்பத்தாராலும் 305 வது பட்டாபிஷேகம் 25.4.78 அன்று பூர்த்தியான போது பொன்னாடைகள் போர்த்தப்பெற்றன.

7. சிதம்பரம் ஸ்ரீ சபாநாயகர் திருக்கோயில் தில்லை மூவாயிரவரால் 15.8.83 அன்று ஸ்ரீ தீக்ஷித் சமுதாய முன்னேற்ற சபை சார்பில் பொன்னாடை போர்த்தி அனுக்ரகம் செய்யப் பெற்றது.

8. சிதம்பரம் தில்லைவாழ் அந்தணர்களால் 3.2.85 அன்று நம் 'பெரிய புராணம்' புத்தகம் வெளியிடப்பட்டபோது பொன்னாடை போர்த்தப்பட்டது.

9. சிதம்பரம் ஸ்ரீ சபாநாயகர் திருக்கோவிலில் 1.1.10.94 அன்று நவராத்திரி விழாவில் ஸ்ரீ மீனாட்சி கல்யாணச் சொற்பொழிவில் பொன்னாடை போர்த்தப்பெற்றது.

10. சிதம்பரம் ஸ்ரீ சபாநாயகர் திருக்கோவிலில் நடந்த ஆனித் திருமஞ்சன விழாவின் பூர்த்தியில் 5.7.95 அன்று பொன்னாடை போர்த்தப்பெற்றது.

11. இது தவிர 30.7.89 தில்லைத் திருக்கோவிலில் ஸ்ரீ நடராஜப் பெருமானுக்குத் ஏகதினலக்ஷார்ச்சனை செய்யும் பேற்றையளித்தும், இரண்டாவது லட்சார்ச்னை 18.8.96 அன்று நடைபெற்றது. தில்லை மூவாயிரவர் அடியேனுக்கும் அடியேனது மகன் சி. நடராஜனுக்கும் பொன்னாடை போர்த்தி ஆசி கூறியருளினர்.

தில்லை நடராஜப் பெருமானின் கருணையும் தில்லை மூவாயிரவரின் நல்லாசியும் பெற்ற அடியேனுக்கு ஸ்ரீ நடராஜப் பெருமான் சிதம்பரம் பிரபல நகை வியாபாரி ஸ்ரீ A.K. சிதம்பரம் செட்டியார் அவர்களின் நட்பையருளி என் குடும்பத்தில் நான் பெரிய மனிதனாக விளங்க அருளினார்.

தில்லைப் பெருமானின் கருணைக்கு இந்த ஏழை எப்படி நன்றிகாட்ட முடியும்? அடியேனது செற்பொழிவுகளின் மூலம் ஒரு கணிசமான தொகை தில்லை திருமதில் திருப்பணிக்கு (1968ல் நம் 236 வது ராமாயணச் சொற்பொழிவு நடந்தது முதல் அடியேன் சொற்பொழிவுகளின் மூலம்) சமர்ப்பிக்க அருள் புரிந்தார். இத்தகைய சேவை அடிக்கடி செய்ய

ஆவலுள்ளவனாக உள்ளேன். ஸ்ரீ நடராஜப் பெருமானும் தில்லை மூவாயிரவரும் அடியேனது சேவையை அடிக்கடி ஏற்றருளப் பிரார்த்திக்கிறேன்.

சிதம்பரம் ஸ்ரீ ஏ.கே. சிதம்பரம் செட்டியார் அவர்களது பீமரதசாந்தி விழாவில் 30.5.90 அன்று நிகழ்த்திய ஸ்ரீ மீனாட்சி கல்யாணம் சொற்பொழிவின் போது பொன்னாடைப் போர்த்தப் பெற்றது.

வாழ்க்கையில் வளம் பெற்று முன்னேற அருள் புரிந்த நடராஜப் பெருமானுக்கு மேலும் சேவை செய்ய என்னுள்ளே ஏதோ ஒரு உணர்ச்சி தூண்டியது, அதன் விளைவாக "தில்லைநாயகன் திருநடராஜன்" என ஒரு புத்தகம் எழுதி, தில்லை மூவாயிரவர்களில் ஒருவரும் சிதம்பரம் அண்ணாமலை சர்வகலாசாலை தமிழ்த்துறைத் தலைவருமான செந்தமிழ்ச் செல்வர் – அருந்தமிழ்ச் செம்மல் – புலவர். பூஜ்ய ஸ்ரீ Dr. ஆனந்த நடராஜ தீட்சிதர் அவர்களின் முகவுரையுடன் வெளியிடும் பேறுபெற்றேன். 30.7.89 & 18.8.96 செய்தமாதிரி மேலும் 3 லட்சார்ச்சனைகளைச் செய்ய இப்புத்தகத்தின் விற்பனைத்துகை பூராவும் உபயோகிக்கத் திட்டமிட்டுள்ளேன் ரூ.முப்பது விலையுள்ள இப்புத்தகத்தை வாங்கி அன்பர்கள பயனடைவதுடன் ஸ்ரீ நடராசப் பெருமானின் லட்சார்ச்சனைக்கு உதவியருள வேண்டுகின்றேன்.

அடியேனுக்கு மேலும் கருணைகாட்டுவது போல தில்லை நடராசப் பெருமான் 1.2.96, 2.2.96 இரண்டுதினங்களில் கம்பன் காவியத்தை மூன்று சொற்பொழிவுகள் செய்யுமாறு அண்ணாமலை சர்வகலா சாலை மூலம் அருளினார். ஆனந்த நடராஜ மூர்த்தியின் கருணையை வணங்குவதுடன் அண்ணாமலை சர்வகலா சாலையினருக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

## 5. ஸ்ரீ ஸ்ருங்கேரி ஸ்ரீசாரராதா பீடம்

1. கர்நாடக மாநிலத்தைச் சேர்ந்த HASSAN –ல் 28.6.1972 அன்று ஸ்ரீ மகாசன்னிதானம் அவர்கள் தங்கப்பதக்கம் அளித்து சால்வை போர்த்தி ஆசி கூறியருளினார்கள்.

2. அடுத்து அவர்களின் திருநெல்வேலி முகாமில் பவித்ர மோதிரம் அளித்து ஆசி கூறியருளினார்கள். ஸ்ரீஸ்ருங்கேரி ஜகத்குரு மகாசன்னிதானம் அவர்கள் 10.12.1976 அன்று அடியேனை ஸ்ருங்கேரி ஸ்ரீசாரதா பீடம் ஆஸ்தான வித்வானாக நியமித்தருளினார்கள்.

3. சென்னை திருவான்மியூர் முகாமில் 16.12.87 அன்று சால்வை போர்த்தி அனுக்ரகம் செய்தருளினார்கள்.

4. ஸ்ருங்கேரியில் 30.12.89 அன்று ஒரு பட்டு சால்வை போர்த்தி அனுக்ரகம் செய்தருளினார்கள்.

5. ஸ்ருங்கேரியில் 1.4.90 அன்று இந்திய உபஜனாதிபதி ஸ்ரீ சங்கர் தயாள் சர்மா அவர்களைக் கொண்டு ஒரு சால்வை போர்த்தி ரூ.5,000/– சன்மானம் அளித்து ஆசி கூறியருளினார்கள். அன்று ஸ்ரீ ராஜிவ் காந்தியும் பிரசன்னமாயிருந்தார்.

மேற்படி ரூ.5,000/– வட்டிக்கு விடப்பட்டு ஸ்ரீஸ்ருங்கேரி ஜகத்குரு அவர்களின் உத்தரவின் பேரில் ஒவ்வொரு வருடம் ஒரு தமிழறிஞருக்குப் பொன்னாடை போர்த்தி கௌரவிக்க அனுமதித்தது அருளியுள்ளார்கள்.

1. 18.6.90 அன்று சென்னை அரசாங்கப் பத்திரிக்கையான திருக்கோயில் ஆசிரியர் ஸ்ரீ அமிர்தலிங்கம், எம்.ஏ. அவர்கள் பொன்னாடை போர்த்தி ஸ்ரீ ஸ்ருங்கேரி சாரதாபீடம் சார்பாக கௌரவிக்கப்பட்டார்.

2. சென்ற 29.9.1990 அன்று கோவை சிரவணபுரம் மடலாயவித்வான் மதுரகவி ஸ்ரீ G.K. ராமசுவாமி ஐயர் (குமாரசிவம்) என்ற தமிழறிஞர் சால்வை போர்த்தி ஸ்ரீஸ்ருங்கேரி சாரதாபீடம் சார்பாக கௌரவிக்கப்பட்டார்.

3. தமிழ்த்தாத்தா டாக்டர் ஸ்ரீ உ.வே. சுவாமிநாத ஐயர் அவர்களின் சீடரான தஞ்சை ஜில்லா ரங்கநாதபுரம் திராவிடக் கவிமணி ஸ்ரீமான், முத்துசுவாமி ஐயர் அவர்களின் புதல்வரும் வாகீச கலாநிதி ஸ்ரீ கி.வா. ஜகந்நாதன் அவர்களின் சீடருமான வித்வான் திரு. மு. கோ. ராமன் அவர்கள் 29.9.93 அன்று ஸ்ரீஸ்ருங்கேரி சாரதாபீடம் சார்பாக சால்வை போர்த்தப்பட்டு கௌரவிக்கப்பட்டார்.

4. மாம்பலம் ஸ்ரீராமகிருஷ்ணா உயர்நிலைப் பள்ளி ஓய்வு பெற்ற தமிழாசிரியர் திரு. தமிழ்முடி – ஸ்ரீ அர்ஜுன் சுப்ரமணியம் அவர்கள் 26.8.95 அன்று ஸ்ரீஸ்ருங்கேரி சாரதா பீடம் சார்பாக சால்வை போர்த்தப்பட்டு கௌரவிக்கப்பட்டார்.

5. சிதம்பரம் அண்ணாமலை சர்வகலா சாலைத் தமிழ் துறைத் தலைவரும், தில்லை மூவாயிரவரில் ஒருவருமான செந்தமிழ்ச் செல்வர்

அருந்தமிழ்ச் செம்மல் – புலவர் – டாக்டர் அ. ஆனந்த நடராஜ தீட்சிதர். M.A., B.O.L., Dip in SANS-Ph. D அவர்களுக்கு 17.8.96 அன்று தில்லை ஆயிரங்கால் மண்டபத்தில் சிறப்புச் செய்யும் விழா நடைபெற்று சிறப்பிக்கப்பட்டது.

6. நாகர்கோவிலைச் சேர்ந்த பவானி ஓய்வுபெற்ற தமிழாசிரியர் திருநில. பகவதீஸ்வரன் 9.9.98 அன்று நம் 382 வது பட்டாபிஷேகத்தின் போது ஸ்ரீஸ்ருங்கேரி சாரதா பீடம் சார்பில் சால்வை போர்த்தப் பெற்று சிறப்பிக்கப்பட்டார்

மற்றும் பல வித்வான்களுக்குப் பொன்னாடை போர்த்திச் சிறப்பளிக்க அருளுமாறு அடியேனது குல குருவான ஸ்ரீ ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ பாரதி தீர்தத மகா சுவாமிகளின் அனுக்ரகத்தைப் பிரார்த்திக்கிறேன்.

சென்னை ராஜா அண்ணாமலைபுரம் ஸ்ரீ ஸ்ருங்கேரிபிரவசனமந்திரம் வெள்ளி விழாவை முன்னிட்டு 14.12.92 அன்று செட்டி நாட்டரசர் ஸ்ரீ எம். எ.எம் ராமசுவாமி அவர்கள் தலைமையில் அடியேனுக்கு ஒரு சால்வை போர்த்தி ரூ.1,000/– சன்மானம் செய்யப்பட்டது.

## 6. கண்ணொளி தந்த கருணை

ஞானக்கண் கிடைக்கக் கல்வியறிவு பரப்பும் சான்றோர்களுக்குச் சிறப்புச் செய்யும் என் குலகுரு ஸ்ரீ ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ சாரதா பீடம் ஸ்ரீ ஸ்ரீ பாரதி தீர்த்த மகாசுவாமிகளின் கருணை மற்றொரு பாக்யத்தையளித்துள்ளது.

மேஜர். டாக்டர் V. ராகவன் என்ற புகழ்பெற்ற கண் சிகிச்சை நிபுணர் 19.7.1993 (ஆடி அமாவாசை – இராமபிரானின் பிறந்த நக்ஷத்திரமான புனர்வசுவில்) அடியேனது இடது கண்ணுக்கு அறுவை சிகிச்சை செய்து குணப்படுத்தினார். வலது கண்ணையும் 27.1.1994 (தைபூசம் – பரதன் பிறந்ததினம்) அறுவை சிகிச்சை செய்தனர். எனது உபாசனா மூர்த்தியின் பெயர் கொண்ட 'Dr. ஸ்ரீராகவன் அடியேன் ரூ.1000/ – அளித்தால் ஒரு ஏழைக்கு இலவச கண் அறுவை சிகிச்சை செய்வதாகக் கூறினார். இதுவரை அவர் மூலம் ..... பேருக்குச் சிகிச்சைக்காக நங்கநல்லூர் சிட்னி ஆஸ்பத்திரிக்கும் மற்ற சிலருக்கும் அளிக்கும் பாக்யம் கிடைத்தது. ஆஸ்பத்திரிக்குச் சிலகருவிகள் வாங்க ரூ.1000/– அளித்தேன். வருடத்திற்கு 12 நண்பர்களுக்காவது

நன்கொடையளிக்கவும் ஆஸ்பத்திரிக்கும் அடிக்கடி கரு·பிகள் வாங்கியளிக்கவும் ஆவலுடையேன். இறைவன் இராமபிரான் இதற்கும் அருளவேண்டுகிறேன். அன்பர்கள நம் சொற்பொழிவுகள் நடக்க ஏற்பாடு செய்தால் நற்காரியங்களுக்கு உதவும் புண்ணியத்தையும் அடைவார்கள்.

(THIS IS BEING PUBLISHED WITH MY CONSENT Major Dr. V.Ragavan- V.S.M.31, Mahadevan Street W.Manibalam, Chennai-33)

# 7. ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடம்

1. ஸ்ரீ ஆசாரியாள் 6.7.72 மாயூரத்தில் ஒரு பட்டாடை போர்த்தி ஆசி கூறியருளினார்கள்.

2. காஞ்சிபுரத்தில் நமது 258–வது கம்பராமாயணம் சொற்பொழிவு 18.10.72 வரை ஏற்பாடு செய்து ஸ்ரீ காமகோடி பீடம் ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமிகள் சால்வை போர்த்தி ஆசி கூறியருளினார்கள்.

3. 19.2.77 அன்று ஸ்ரீராமகதா ப்ராண என்று பட்டமளித்து ஆசி கூறினார்கள்.

# 8. ஸ்ரீ திருவாவடுதுறை ஆதீனம் அருளிய ஆசி

அடியேனுக்கு இளம்பருவத்திலிருந்தே திரிசிரபுரம் மகாவித்வான். திரு.மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்களிடம் ஈடுபாடு மிக அதிகம். அடியேனது சொற்பொழிவுகளிலும், கட்டுரைகளின் மூலமும் அந்தக் கவிநாயகரின் பெருமையைப் பரப்பிவந்தேன். இது கண்டு பேருவகை கொண்ட திருவாவடுதுறை ஆதினம் ஸ்ரீலஸ்ரீ சிவப்ரகாச தேசிக பரமாசார்ய மகாசன்னிதானம் அவர்கள் 6.2.2000 அன்று திருவாவடுதுறையில் ஸ்ரீமகா வித்வான் அவர்களின் நினைவுப் பரிசாக ரூ2000/– 2 சால்வைகள், ஒரு தங்கமோதிரம் அளித்து ஆசி கூறியருளினார்கள். ஸ்ரீ ஸ்ரீ மகா சன்னிதானம் அவர்களுக்கு என் பக்தி நிறைந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். திரு.மகாவித்வான் அவர்களின் நினவைாக தமிழில் நல்ல மதிப்பெண்கள் மேலும் மாணவர்கட்கு பிரதி வருடமும் சில பள்ளிக் கூடங்களில் புத்தகங்கள் வாங்கியளிக்கத் திட்டமிட்டுள்ளேன்.

மகாசிவராத்ரியன்று 4.3.2000 அன்று மைலாப்பூர் ஸ்ரீராமகிருஷ்ண மாணவர் இல்லத்திற்கு ரூ1000/– இந்தப் பணிக்காக அளிக்கும் பேறு பெற்றேன், இறைவனருளாலும் அன்பர்களின் ஆதரவினாலும் பல மாணவர்கட்கு உதவிசெய்யத் திட்டமிட்டுள்ளேன். அனைவரும் ஆசி கூறியருள வேண்டுகிறேன்.

## 9. ஸ்ரீ தருமபுர ஆதினம் அருளிய ஆசி

தருமபுர ஆதினம் 26 வது குருமகாசன்னிதானம் ஸ்ரீலஸ்ரீ ஷண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் 29.5.1996 அன்று பொன்னாடை போர்த்தி ஆசி கூறியருளினார்கள்.

## 10. கர்நாடகத்தின் ஆசி

தர்மஸ்தல தலைவர் பூஜ்ய ஸ்ரீ வீரேந்திரஹெக்டே அவர்கள் 11.12.1995 அன்று சால்வை போர்த்தி ஆசி கூறியருளினார்கள். ஸ்ரீ மஞ்சு நாத சுவாமிகிருபை.

## 11. மற்ற தவச்செல்வர்களின் ஆசிகள்

நமது 105–வது ஸ்ரீராமபட்டாபிஷேகம் 2.5.1956 ரிஷிகேசம் ஸ்ரீ சிவானந்தா ஆஸ்ரமத்தில் பூர்த்தியான போது ஸ்ரீசுவாமிசிவானந்தா அவர்கள் "கம்பராமாயண ஜோதி" பட்டமளித்து ஆசி கூறியருளிப் பேசியது:–

நமது தியாகராஜ பாகவதருக்கு கம்பர் மற்றும் ராமரின் கருணை இருக்கிறது. அவருக்கு நல்ல அந்தஸ்து இருந்தது, தியாகராஜனின் உள்ளத்தில் சில நற்செயல்கள் உருவெடுத்தன. எனக்குக் கோட், டை வேண்டாம் என்று எண்ணினார். ஆகவே, நான் குறிப்பிட்டது போல் கடவுள் மிகப்பெரும் பணிக்காக அவரைத் தேர்ந்தெடுத்திருக்கிறார். கடந்த பதினேழு நாட்களாக ஏராளமான பேர்கள் அவரது கதையைக் கேட்டிருக்கிறார்கள். பாவன ராமா, பதித பாவன ராமா என்ற அவரது அழகிய பாடலையும் கேட்டிருக்கிறார்கள். அவருக்கு நல்ல புத்திக் கூர்மை இருக்கிறது, சிரிப்பின் மூலம் சிந்திக்க வைக்கும் ஆற்றல் வரப்பிரசாதமாக அவருக்குக் கிடைத்திருக்கிறது.

இவ்வளவு சிறுவயதில் தியாகராஜன் 105 தடவைகள் கம்பராமாயணக் கதையை செய்திருக்கிறார், கம்பராமாயணத்தை ஹரிகதா முறையில் இதுவரை யாரும் சொன்னதில்லை, அவர் தனது பணியை இன்னும் அதிகமாகச் செய்ய வேண்டும் என்று நான் கேட்டுக் கொண்டிருக்கிறேன். தியாகராஜன் மீண்டும் வருவார். அவருக்கு நான் நிரந்தர அழைப்பு விடுத்துள்ளேன். கடவுள் அவருக்கு ஆரோக்கியம், நீண்ட ஆயுள், பேரானந்தம், வளம், அமரத்துவம் அனைத்தும் அருளட்டும்.

கவியோகி மஹரிஷி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார் அவர்கள ஸ்ரீ தியாகராஜனின் ஸ்ரீ மத்சம்பூர்ண ராமகதாசாகரம் சுந்தர காண்டம் புத்தகத்திற்கு அளித்துள்ள முகவுரையில் : நானும் கம்பச் சொற்பொழிவாற்றியிருக்கிறேன். எனினும் தியாகராசன் சொல்லும் கம்பராமாயண இசைப் பொழிவில் தனிச்சுவையுள்ளது. என் உள்ளத்தைத் தொட்ட உரையாளர் தியாகராஜரே, இவர் கதையை கேட்பது மட்டும் போதாது, கண்ணாரக் காண வேண்டும்.

கம்பக் கலைமணி என் கண்மணி தியாகேசன்
இன்பக் கதையை இசைக்குங்கால்-அன்புருகக்
கண்பேசும்; கைபேசும்;கால்பேசும்; செய்யுதமிழ்ப்
பண்பேசும் பாரீர்! பரிந்து.

சொல்லுக்கேற்ற உணர்வு; உணர்வுக்கேற்ற குழைவு; குழைவுக்கேற்ற அபிநயத்துடன் அவர் செய்யும் கதை இன்பச்சுதையாகும்; தமிழர் ஊர்தோறும் இவரை அழைத்துக் கதை பருக வேண்டும் ; வாழ்வு திருந்தும், மயக்க தீரும் ; சமயப் பற்று உண்டாகும்.

தியாகராசர் குணக்குன்று ; அவர் எல்லோரையும் மிகவும் மதிப்பவர் ; நட்புக்கு இனியவர். பரோபகார சீலர். தமது கதை வருவாயில் இயன்ற தான தருமங்களை செய்கிறார். அத்தகைய அன்புப் புலவர் கோத்தளித்த சுந்தர காண்டத்தை கற்றுக் கேட்டுக் கவியென வாழ்வீராக!

## 12. ஸ்ரீராஜதரிசனங்களும் பரிசில்களும்

1. கொச்சிமன்னர் மேன்மை தங்கிய ஸ்ரீராமவர்ப பரிட்சித்தம்பிரான் மகாராஜா அவர்கள் 17.12.1955 அன்ரூ பேட்டியளித்தார்கள்.

2. எட்டயபுரம் ஸ்ரீராஜ ஜகவீர ராமமுத்துக் குமார வெங்கடேஸ்வர எட்டப்ப மகாராஜா அவர்கள் ஆதரவில் 20.10.1956 முதல் 15.11.1956 வரை நமது 113–வது இராமாயணம் நடைபெற்றுத் தங்கமெடல் அளித்து ஆசி கூறினார்கள்.

3. மேன்மை மிகுந்த திருவாங்கூர் மன்னர் பிரான் ஸ்ரீராமவர்ம மகாராஜா அவர்களுடன் 1958, 1972 இரு முறைகள் பேட்டி காணும் பாக்கியம் கிடைத்தது.

4. நமது 128 வது இராமாயணம் 17.3.1958 முதல் 25.3.1958 வரை ராமநாதபுரம் சமஸ்தானம் ஆதரவில் நடைபெற்று திவான் ஸ்ரீ பாலாஜிராவ் அவர்கள் பொன்னாடை போர்த்தி கௌரவித்தார்.

5. நமது 161 வது இராமயணம் 14.2.1961 முதல் 2.3.1961 வரை ராமநாதபுரம் சமஸ்தானம் ஆதரவில் நடைபெற்று மேன்மை மிகுந்த ஸ்ரீஷண்முக ராஜேஸ்வரி சேதுபதி மகாராஜா அவர்கள் பொன்னாடை போர்த்தி கௌரவித்தருளினார்.

6. ஸ்ரீ சொரிமுத்து ஐயனார் திருக்கோவிலில் 7.8.1994 அன்று T.N.S. முருகதாஸ் தீர்த்தபதி மகாராஜா அவர்கள் சால்வை போர்த்தி ஆசி கூறி அருளினார்கள்.

## 13. பெரும்பாக்கியம்

ஸ்ரீ சிங்கம்பட்டி மகாராஜா அவர்கள் இருமுறைகளும் ஸ்ரீ ராமநாதபுரம் ராஜ தம்பதிகள் ஒரு முறையும் அடியேனது இல்லத்திற்கு வந்து ஆசி கூறும் பேறு பெற்றேன்.

11.8.1995 அன்று சென்னை கம்பன் கழகத்தார் அமரர்.கி.வா. ஜகந்நாதன் அவர்களின் நினைவுப் பரிசாகப் பொன்னாடை போர்த்தி கௌரவித்தனர். கம்பனடியான் [illegible] ரவு பெற்றேன்.

## 14. இராமகாதை நடைபெற்ற இடங்கள்

(தேதி விவரம் நேரில் அறியலாம்)

1 மதுரை, 2 அருவங்காடு, 3 மதுரை, 4&5 கோயம்புத்தூர், 1943 6 விருதுநகர், 7 to 9 மதுரை, 1949 10&11 திருச்சி, 12 அவினாசி, 13

மேட்டுப்பாளையம், 14 ஊட்டி, 15 மோயார், 16 மசினகுடி, 17 அருவங்காடு. 1950 18 அவினாசி, 19&20 திருப்பூர், 21 பங்களூர், 22 கோபி, 23 கூகலூர், 24 அவினாசி, 25 சத்யமங்கலம், 26 to 28 கோயம்புத்தூர், 29 மௌன்ட், பிளசன்ட் 30 வெலிங்க்டன், 31 கூனூர், 1951 32 ஊட்டி, 33 மோயார், 34 ஈரோடு, 35 to 39 திருச்சி, 40 மகாதானபுரம். 41 to 44 புதுக்கோட்டை, 1952. 45 புதுக்கோட்டை, 46 அரிமளம், 47 சேலம், 48 புதுக்கோட்டை, 49 திருச்சி, 50 திருமயம், 51 & 52 ஆலங்குடி, 53 வடகாடு, 54 கானடுகாத்தான், 55 அரூர், 56 நாகப்பட்டினம், 57 புதுக்கோட்டை, 1953 58 கீரனூர், 59&60 காரைக்குடி, 61 அதிராம்பட்டினம், 62 புதுக்கோட்டை, 63 கோழிக்கோடு, 64 கோயம்புத்தூர், 65 மேட்டுப்பாளையம், 66 பாபநாசம். 67 ரங்கநாதபுரம், 68 அய்யம்பேட்டை, 69 & 70 திருக்காட்டுப்பள்ளி, 71 மிலட்டூர், 72 திருக்காட்டுப்பள்ளி, 73 புதுச்சத்திரம், 74 மேட்டூர் அணை. 75 மேவானி, 1954. 76 கண்டனூர், 77 கட்லூர், 78 குரோம்பேட்டை, 79 சி.என் பாளையம், 80 மேலகுமாரமங்கலம், 81 அரியலூர், 82 புது வயல், 83 ஆத்தூர், 84 திண்டுக்கல், 85 விருதுநகர், 86 ஸ்ரீரங்கம், 1955 87 தூத்துக்குடி, 88 மாம்பலம், 89 சின்னசேலம், 90 to 92 டாடாநகர், 93 திருவையாறு, 94 கும்பகோணம், 95 தேவகோட்டை, 96 ஆத்தூர்–சேலம், 97 திருவிடைமருதூர், 98 கும்பகோணம், 99 எர்ணாகுளம், 1956 100 பூந்தமல்லி, 101 சிதம்பரம், 102 சிந்தாதிரிப்பேட்டை, 103 மாம்பலம், 104 புதுடில்லி, 105 ரிஷிகேசம், 106 ஜமால்பூர், 107 டாடாநகர், 108 கல்கத்தா.

## இரண்டாவது பிரதிக்ஞை

1956 109 ஹீராகூட், 110 கரக்பூர், 111 மன்னார்குடி, 112 வடுவூர், 113 எட்டையபுரம், 114 சேலம், 115 ராசிபுரம், 116 சிவகாசி, 1957 117 மே.மாம்பலம், 118 விசாகப்பட்டினம், 119 பங்களூர், 120 ஊரிகாம், 121 தண்டையார்பேட்டை, 122 மதுக்கூர், 123 ஸ்ரீ ராமகதா நிலையம், 124 தேவகோட்டை, 125 ஊரிகாம், 126 பாளையங்கோட்டை, 1958 127 திருநெல்வேலி, 128 ராமநாதபுரம், 129 கிர்கி 130 திருவனந்தவுரம் 131 தஞ்சாவூர், 132 புதுக்கோட்டை, 133 விழுப்புரம், 134 புதுப்பட்டி, 135 கூனூர், 136& 137 வேலூர், 138 திருப்பத்தூர், என்.ஏ.) 1959 139 உடுமலைப்பேட்டை, 140 எமரால்ட் 141 அரக்கோணம், 142 பங்களூர், 143 & 144 சென்னை, 145 பங்களூர், 146 கும்பகோணம், 147 மேட்டுப்பாளையம், 148 புதுக்கோட்டை. 1960 149 உடுமலைப்பேட்டை, 150 கரூர், 151 நெய்வேலி, 152 மாயனூர், 153 கொழிஞ்சிவாடி, 154 புதுக்கோட்டை, 155 திருப்பூர், 156 தாரா புரம்,

157 கோயம்புத்தூர், 158 பொள்ளாச்சி, 1961. 159 மே. மாம்பலம், 160 ரெட்டியாரூர், 161 ராமநாதபுரம், 162 திருப்பூர், 163 காட்டுப்புத்தூர், 164 மதுரை, 165 திருச்சி, 166 துலுக்கப்பட்டி, 167 போபால், 168 ஜபல்பூர், 1962 169 கொப்பனாபட்டி, 170 மேலச்சிவபுரி, 171 கண்டவராயன்பட்டி, 172 நெய்வேலி, 173 தூத்துக்குடி, 174 & 175 சென்னை,(28&17) 1963 176 சென்னை, 177 பம்பாய், 178 சென்னை, (1) 179 பனையபட்டி, 180 சிறுகமணி, 181 நங்கவரம், 182 பொள்ளாச்சி, 183 டாப்ஸலிப, 1964 184 திம்மாச்சிபுரம், 185 புளியம்பட்டி, 186 அத்திக்கடவு, 187 தூத்துக்குடி, 188 சென்னை, (23) 189 மதுரை, 190 கோயம்புத்தூர், 1965 191 திருப்பத்தூர், (ஆர்.டி) 192 எர்ணாகுளம், 193 உரத்தநாடு, 194 கொச்சி, 195 &196 சென்னை, (30.38) 197 ஊட்டி, 198 திருச்சி, 199 பெருங்குளம், 1966. 200 திருச்சூர், 201 நாகர்கோயில், 202 நெய்வேலி, 203 ஈரோடு, 204 திருப்பூர், 205 மிதிலைப் பட்டி, 206 லால்குடி, 207 திருச்சி, 208 கோயம்புத்தூர், 209 முசிறி, 210 புதுகோட்டை, 211 கோயம்புத்தூர், 212 தொட்டியம், 213 நாமக்கல், 214 ரூர்கெலா, 215 ஈரோடு, 216 அரக்கோணம்.

## மூன்றாவது பிரதிக்ஞை

1967. 217 துறையூர், 218 ஊட்டி, 219 ஸ்ரீ முஷ்ணம், 220 அம்மங்குடி, 221 லால்குடி, 1968 222 சென்னை (28) 223 புதுக்கோட்டை, 224 பொள்ளாச்சி, 225 பங்களூர், 226 சிதம்பரம், 227 நெய்வேலி, 1969. 228 பாயவரம், 229 பங்களூர், 230 புதுடில்லி, 231 சிதம்பரம், 232 ஒரத்தநாடு, 233 சென்னை (5) 234 கிருஷ்ணகிரி, 235 புதுக்கோட்டை, 236 கும்பகோணம், 237 ரூர்கேலா, 238 திருச்சி, 239 நன்னிலம், 240 பெரியகுளம், 241 கோயம்புத்தூர், 242 திருவையாறு, 243 புதுக்கோட்டை, 1971. 244 கிணத்துக்கடவு, 245 குளித்தலை, 246 மதுரை, 247 பொள்ளாச்சி, 248 அன்னூர், 249 கோயம்புத்தூர், 250 to 252 சென்னை, (28,84,57) 253 சிவகாசி, 1972.254 பங்களூர், 255 சிதம்பரம்,256 நெய்வேலி, 257 சென்னை, 258 காஞ்சிபுரம். 259 புதுடில்லி, 260 திருவனந்தபுரம், 1973.261 கோபி 262 ரெட்டியாரூர், 263 சென்னை, (15) 264 அன்னூர், 265 திருநெல்வேலி, 266 சென்னை, 267 ஊட்டி, 268 ஒனாப்பாளையம், 269 புதுக்கோட்டை, 270 தொண்டாமுத்தூர், 1974. 271 கண்டப்பாளையம், 272 நாமக்கல், 273 பாளையங்கோட்டை, 274 & 275 மதுரை, 276 கிருஷ்ணகிரி, 277 திருநெல்வேலி, 1975 278 ஈரோடு, 279 கடலூர், 280 ஸ்ரீரங்கம், 281 மதுக்கூர், 282 க லூர், 283 பாரமடையூர், 284 விசாகப்பட்டினம், 285 திருவெறும்பூர், 286 தே வனூர் புதூர், 287 அகமதாபாத், 288 மதுரை, 289 ராஜேந்திரம்,

290 மாயூரம், 291 நன்னிலம், 292 அன்னூர், 293 பங்களூர், 294 to 296 சென்னை, 297 திருப்பூர், 298 கிணத்துக்கடவு, 299 நங்கவரம், 300 சென்னை, 301 சிதம்பரம், 302 பொள்ளாச்சி, 303 பங்களூர், 304 புவனகிரி, 305 சேலம், 306 புதுக்கோட்டை, 307 சென்னை, 308 திருக்கோயிலூர், 309 தாராபுரம், 310 கரூர், 311 ராமசாமிராஜா நகர், 312 to 314 சென்னை, 315 திருச்சி, 316 சென்னை, 317 உதகமண்டலம், 318 சென்னை, 319 கள்ளிடைக்குறிச்சி, 320 ரூர்கெலா, 321 கடலூர், 322 சுண்டப்பாளையம், 323 ஜய்ப்பூர், 324 – Aசென்னை, 324 – B சென்னை, 325 விருதுநகர், 1983 326 புதுக்கோட்டை, 327 பூனா, 328 டால்மியாபுரம், 329 நெய்வேலி, 330 குளித்தலை, 331 பவானி, 332 ஸ்ரீராமகதா நிலையம், 333 குரோம்பேட்டை, 334 லக்ஷ்மி நகர், 1984 335 சிவகங்கை, 336 ஈரோடு, 337 தில்லைகங்காநகர் சென்னை–61,338 சைதாப்பேட்டை, 339 ஷெனாய் நகர், 340 பாலக்காடு 341 நங்கநல்லூர், 342 கிருஷ்ணராயபுரம், 343 நங்கநல்லூர், 344 ரெட்டியாரூர், 345 சுண்டப்பாளையம், 346 சென்னை, (87) 347 மேட்டுப்பாளையம், 348 நங்கநல்லூர், 349 சுண்டபாளையம், 350 சத்யமங்கலம், 351 அம்பத்தூர் 352 பொன், புதுப்பட்டி, 353 தில்லைகங்கா நகர், 354 மீஞ்சூர், 355 தாம்பரம், 356 நங்கநலலூர், 357 உடுமலைப்பேட்டை, 358 ஹௌரா, 359 தேவகோட்டை, 360 சக்தி நகர், 361 நங்கநல்லூர், 362 திருநெல்வேலி, 363 ஸ்ரீவைகுண்டம், 364 நாக்பூர், 365 பொள்ளாச்சி, 366 R.A.புரம், 367 திருவனந்தபுரம், 368 ராமகதாநிலையம் (90 நாட்கள்) , 369 புதுடெல்லி, 370 பழைய பெருங்களத்தூர், 371 கடலூர், 372 ஸ்ரீரங்கம், 373 கடலூார், 374 சென்னை–10,375 சென்னை, 376 பங்களூர் 377 சென்னை, 378 ஸ்ரீமுஷ்ணம், 379 சென்னை, 380 டில்லி, 381 பங்களூர், 382 சென்னை, 383 மதுரை, (324 இராமாயணங்களில் ஒரு இடத்தில் கதை சரியாக நடத்தாமல் அன்பர்கள் தவறாக நடந்து கொண்டதால் அதை நாம் நன்கு முடித்துக் கடமையைச் செய்த போதிலும் அந்த ஒரு பட்டாபிஷேகம் இராமபிரானுக்கு உவப்பாக இராது எனத் தோன்றியதால் 324 – Aபட்டாபிஷேகத்தை முடித்து 324– Bசென்னையில் மங்களகரமாக பூர்த்தி செய்யப்பட்டது.) 384 to 388 சென்னை, 389 கடலூர், 390 சென்னை.

# 15. பட்டங்கள் பெற்ற விவரங்கள்

1. ஸ்ரீராமகதாரத்னம் : நமது 27 வது கம்பராமயணச் சொற்பொழிவு 4.9.1950 அன்று கோவை தெலுங்கு பிராமணாள் வீதியில் முடிவடைந்தபோது இந்திய வாலிபர் சங்கத்தின் சார்பாக கோவை நவ இந்தியா (அந்நாள் ஆசிரியர்) திரு. ராமஸ்வாமி அவர்களால் அளிக்கப்பட்டது.

2. கம்பர் கவி முழக்கம்: தஞ்சை ஜில்லா ரங்கநாத புரத்தில் (19.8.1953) முடிவடைந்த 67 வது பட்டாபிஷேகத்தின் போது தமிழ் தாத்தா ஸ்ரீ உ.வே. சாமிநாதய்யர் அவர்களின் சீடர் திரு, திராவிடக்கவிமணி முத்துஸ்வாமி அய்யர் MA.L.T. அவர்களால அளிக்கப்பட்டது.

3. கம்பன் வல்லான் : திருக்காட்டுப்பள்ளியில் நடைபெற்ற 70 வது பட்டாபிஷேகத்தின் போது 7.10.1953 அன்று பொதுமக்கள் சார்பாக P.S. ஹைஸ்கூல் தலைமை ஆசிரியர் ஸ்ரீமான் S.R. பாலசுப்பிரமணிய அய்யர் அவர்களால் அளிக்கப்பட்டது.

4. கம்பன் கதிரொளி : விருதுநகர் காரைக்காலம்மையார் சங்கத்தின் சார்பில் நடைபெற்ற 85 வது பட்டாபிஷேகத்தின் போது ஷை சங்கத்தின் சார்பில் 14.1.1954 அன்று அளிக்கப்பட்டது.

5. கம்பன் கவிச் செல்வன்: கும்பகோணம் ஸ்ரீ சங்கரமடத்தில் நடந்து 10.11.1955 அன்று முடிவடைந்த 98 வது பட்டாபிஷேகத்தின் போது நகர மக்கள் சார்பில் அளிக்கப்பட்டது.

6. முத்தமிழ் வித்தகர்: ராபர்ட்சன்பேட்டை (KGF) யில் நடந்து 21.11.1957 அன்று முடிவடைந்த 126 வது பட்டாபிஷேகத்தில் ஷெயூர் வித்வான் திரு ஆறுமுகனார் அவர்களால் அளிக்கப்பட்டது.

7. கம்ப நாடகக் கலைஞன் : சென்னை ராஜா அண்ணாமலைபுரத்தில் ஸ்ரீஸ்ருங்கேரிபிரவசனமந்திரத்தில் நடைபெற்று 11.2.1968 அன்று முடிவடைந்த 222 வது பட்டாபிஷேகத்தின் போது அளிக்கப்பெற்றது.

8. கம்பன் முத்தமிழ்க் கடல் : பெரியகுளம் திவ்ய ஜீவன சங்கத்தில் 12.7.1970 அன்று நடைபெற்ற 240 வது பட்டாபிஷேகத்தில் அளிக்கப்பெற்றது.

9. கம்பன் சீர் பரவுவார் என்ற பட்டம் புதுக்கோட்டை இலக்கியப் பேரவையினால் 7.9.1971 அன்று அளிக்கப்பட்டது.

10. கம்பன் கவிக் களஞ்சியம் : அகமதாபாத் வைதீக சமாஜத்தில் 13.11.1976 பூர்த்தியான 291 வது பட்டாபிஷேகத்தில் அளிக்கப்பட்டது.

11. ஸ்ரீ ராமகதா அமிர்தவர்ஷிணி : மதுரை ஷெனாய் நகர் ஆஞ்சநேயர் கோயிலில் 20.12.1976 அன்று பூர்த்தியான 292 வது பட்டாபிஷேகத்தில் அளிக்கப்பெற்றது.

12. அபிநவ கம்பன் : சென்னை ஆழ்வார் திருநகர்–ஹா''பீடத்தில் 12.3.1980 அன்று பூர்த்தியான 316 வது பட்டாபிஷேகத்தில் அளிக்கப்பெற்றது.

13. கம்பராமாயணக் கவிக்குயில்.

14. கம்பன் கவிநயமணி பட்டங்கள் 12.5.1985 பாலக்காடு கல்பாத்தி இளைஞர் சங்கத்தில் 340 வது பட்டாபிஷேகத்தின் போது அளிக்கப்பட்டன.

15. "கம்பன் புகழொளி" 10.4.1993 இரவு சென்னை வாணுவம் பேட்டை திருக்குறள் இலக்கிய மன்றத்தாரால் அளிக்கப்பெற்றது.

## 16. தங்கமெடல் பெற்ற விவரங்கள்

1. திருச்சி பாலக்கரையில் 6.8.1951 முடிந்த 37–வது பட்டாபிஷேகத்தில் ஸ்ரீ வி.ஏ.கே. ரங்கநாதக்கோனார் அவர்கள் தங்கமெடல் பரிசளித்தார்கள்.

2. பாளையங்கோட்டையில் 15.12.1957 அன்று நடைபெற்ற 123–வது பட்டாபிஷேகத்தில் அளிக்கப்பெற்றது.

3. சென்னை ஷெனாய் நகரில் 6.8.1965 அன்று நடைபெற்ற பிரசங்கங்களின் முடிவில் ஸ்ரீபாலஷண்முகானந்தா சபையாரால் அளிக்கப்பட்டது.

## 17. பொன்னாடை போர்த்தப்பட்ட விவரங்கள்

1. தேவகோட்டையில் அடியேனுடைய 124 வது இராமாயண பிரசங்கமும் திருவிளையாடற் புராணப் பிரசங்கமும் சேர்ந்து நடைபெற்றன. 9.9.1957 அன்று இரவு நடந்த மீனாட்சி கல்யாணத்தில் தேவகோட்டை ஸ்ரீ அ.கண. வீர. கண்ணப்பச் செட்டியாரவர்களால் போர்த்தப்பட்டது.

2. உடுமலைப்பேட்டையில் நடைபெற்ற 129–வது இராமாயண பட்டாபிஷேகத்தில் 4.3.59 அன்று பொதுமக்கள் சார்பில் ஸ்ரீ வி. ஸ்ரீனிவாசன் அவர்களால் போர்த்தப்பட்டது.

3. விழுப்புரம் திவ்ய ஜீவன சங்கத்தில் நடைபெற்று 20.9.1959 அன்று முடிவடைந்த திருவிளையாடற் புராணப் பிரசங்கத்தின் போது கனம் மந்திரி ஸ்ரீ M. பக்தவத்சலம் அவர்களால் போர்த்தப்பட்டது.

4. கும்பகோணம் தியாகப்ரம்ம சபையில் ஆதரவில் நடைபெற்ற 146–வது இராமபட்டாபிஷேகத்தின் முடிவில் 23.10.1959 அன்று கனம் மந்திரி ஸ்ரீ பக்தவத்சலம் அவர்களால் போர்த்தப்பட்டது.

5. பொள்ளாச்சி தாலுகா ரெட்டியாரூரில் நடை பெற்ற 160 வது பட்டாபிஷேக முடிவில் 6.2.1961 அன்று ஸ்ரீ திருமலைச்சாமி B.A. அவர்களால் போர்த்தப்பட்டது.

6. உடுமலைத் தாலுகா தேவனூர் புதூரில் நடை பெற்ற திருவிளையாடற் புராணப் பிரசங்கத்தின் முடிவில் அரசமரத்துத் தோட்டம் ஸ்ரீ சண்முகவேல் கவுண்டர் அவர்கள் சார்பில் பொள்ளாச்சி M.L.A. ஸ்ரீ N. மகாலிங்கம்B.Sc. அவர்களால் 14.3.1961 அன்று போர்த்தப்பட்டது.

7. திருச்சி ஜில்லா கொப்பனாபட்டியில் ஸ்ரீ மு.ப. நாராயணன் செட்டியார் அவர்கள் இல்லத்தில் நடைபெற்ற 169வது பட்டாபிஷேக முடிவில் 15.1.1962 அன்று ஸ்ரீ மு. ப, நாராயணன் செட்டியார் (CHAIRMAN, India, Leather Corporation, Chennai) அவர்களால் போர்த்தப்பட்டது.

8. சென்னை ராஜா அண்ணாமலைபுரம் ஸ்ரீமான் வைத்ய சுப்ரமணிய அய்யர் அவர்களின் ஆதரவில் நடைபெற்று முடிவடைந்த 174 வது பட்டாபிஷேகத்தின் போது 14.8.1962 அன்று கனம் மந்திரி ஸ்ரீ பக்தவத்சலம் அவர்கள் தலைமையில் ஸ்ரீ செட்டிநாடு அரசர் ஸ்ரீ ராஜா சர். முத்தையா செட்டியார் அவர்களால் போர்த்தப்பட்டது.

9. பொள்ளாச்சி மாரியம்மன் கோயிலில் நடைபெற்று 19.101963 அன்று முடிவடைந்த 182 வது பட்டாபிஷேகத்தில் முன்னாள் அமைச்சர் திரு.T.S அவினாசிலிங்கம் செட்டியார் அவர்கள் தலைமையில் ஸ்ரீ வயலூர் சுவாமிகள், மத்திய அரசாங்க மந்திரி ஸ்ரீமதி லட்சுமிமேனன் அவர்கள் முன்னிலையில் பொள்ளாச்சி ஸ்ரீ N. மகாலிங்கம் M.L.A. அவர்களால் போர்த்தப்பட்டது.

10. கோவைR.S. புரம் திவான் பகதூர்ரோட் ரத்ன விநாயகர் கோயிலில் நடைபெற்ற 190 வது இராமாயணச் சொற்பொழிவு நடைபெற்றபின் 10.12.64 அன்று திரு.M.S. ஜகன்னாதய்யங்கள் அவர்களால் போர்த்தப்பட்டது.

11. சென்னை – 38 கமலவினாயகா I.C.F. சத் சங்கத்தில் 12.8.1968 அன்று நடைபெற்ற ஸ்ரீ மீனாட்சி கல்யாணம் வெளியீடு விழாவில் செட்டி நாட்டரசர் அவர்களின் காரியதரிசி ஸ்ரீ V.வைத்யசுபரமணய அய்யா அவர்களால் போர்த்தப்பட்டது.

12. 23.3.65 அன்று இரவு நாகர் கோயிலில் நடைபெற்ற 201 வது பட்டாபிஷேக விழாவில் பொதுமக்கள் சார்பில் ஸ்ரீ ஆறுமுக நாவலர் அவர்களால் பொன்னாடை போர்த்தப்பட்டது.

13. 14.10.66 வெள்ளியன்று இரவு கோவை R.S. புரம் குருகுகான சபையாரால் 208 வது ஸ்ரீ ராம பட்டாபிஷேகத்தின் முடிவில் ஸ்ரீ M.S. ஜகந்நாதய்யங்கார் அவர்களைக் கொண்டு போர்த்தப்பட்டது.

14. சென்னை ராஜா அண்ணாமலைபுரம் ஸ்ரீஸ்ருங்கேரி பிரவசன மந்திரத்தில் நடைபெற்ற 11.2.1968 முடிவடைந்த 222 வது பட்டாபிஷேக முடிவில் ஸ்ரீ S. நல்லபெருமாள் அவர்களால் போர்த்தப்பட்டது.

15. கோயம்புத்தூர் 5.6.1971 அன்று நிறைவேறிய 249 வது பட்டாபிஷேகத்தில் லட்சுமி மில்ஸ் திரு, வெங்கடசாமி நாயுடு அவர்களால் போர்த்தப்ட்டது,

16. சென்னை ராஜா அண்ணாமலைபுரத்தில் 28 [illegible].1971 அன்று நிறைவேறிய 250 வது பட்டாபிஷேகம், நம் ஸ்ரீமத் சம்பூர்ணராம கதா சாகரம் புத்தக வெளியீட்டு விழாவில் ஸ்ரீமான் வைத்ய சுப்பரமணிய அய்யர் அவர்களால் போர்த்தப்பட்டது.

17. நெய்வேலியில் 14.5.1972 அன்று நிறைவேறிய 256 வது பட்டாபிஷேக விழாவில் அருள் நெறி சங்கத்தினரால் போர்த்தப்பட்டது.

18. திருவனந்தபுரம் ஸ்ரீ சீதாராமபக்த சபாவில் நடைபெற்ற 260 வது பட்டாபிஷேகத்தன்று 28.12.1972 போர்த்தப்பெற்றது.

19. செட்டியாரூரில் (பொள்ளாச்சி) நடைபெற்ற 262 வது பட்டாபிஷேகத்தில் (2.2.73 to 16.273) திரு கி.வா. ஜகந்நாதன் அவர்களால் போர்த்தப்பெற்றது.

20. சென்னை சைதாப்பேட்டையில் நடைபெற்ற 263 வது பட்டாபிஷேகத்தில் 12.4.73 அன்று போர்த்தப்பெற்றது.

21. திருநெல்வேலி NGO காலனியில் நடைபெற்ற 265 வது பட்டாபிஷேகத்தில் முருகன் கோவிலாரால் 20.6:73 அன்று போர்த்தப்பெற்றது.

22. பாளையங்கோட்டை கோபால சுவாமி கோவிலில் நடைபெற்ற 273 வது பட்டாபிஷேகத்தில் ஸ்ரீ ராம்பாபுலர் ஸ்ரீ M.S. சுந்தரம் பிள்ளை அவர்களால் போர்த்தப்பெற்றது.

23. கோவைஜில்லா, பாரமடையூரில் 4.4.76 அன்று நமது 284 வது பட்டாபிஷேகம் பூர்த்தியான போது ஸ்ரீ ஷண்முக சுந்தரக் கவுண்டர்அவர்கள் குடும்பத்தாரால் போர்த்தப்பெற்றது.

24. தேவனூர் புதூரில் 21.5.76 அன்று 287 வது பட்டாபிஷேகத்தில் ஸ்ரீ சண்முகவேல் கவுண்டர் குடும்பத்தாரால் போர்த்தப்பட்டது.

25. பொள்ளர்ச்சியில் 16.5.1978 அன்று பூர்த்தியான 306 வது பட்டாபிஷேகத்தின் போது ஸ்ரீ N.மகாலிங்கம் அவர்கள சார்பில் போர்த்தப்பெற்றது.

26. சென்னை ராஜா அண்ணாமலைபுரத்தில் 11.8.82 பூர்த்தியான 324 வது பட்டாபிஷேகத்தின் போது ஸ்ரீமான் தர்மாத்மாஸ்ரீ வைத்ய சுப்ரமண்ய ஐயர் அவர்கள் குடும்பத்தாரால் போர்த்தப் பெற்றது,

27. விருதுநகர் காரைக்கால் அம்மையார் சங்கத்தில் 22.8.82 அன்று 325 வது பட்டாபிஷேகம் பூர்த்தியான போது போர்த்தப்பெற்றது.

28. சிவகாசி திருப்புகழ் மாதர் சபையினரால் 17.12.82 அன்று போர்த்தப்பட்டது.

29. சென்னை – தில்லைகங்கா நகர் ஸ்ரீராஜராஜேஸ்வரி கலைக்கழகத்தினரால் 8.4.83 அன்று போர்த்தப்பெற்றது.

30. புனா அருகிலுள்ள டெஹுரோடு இந்து சமய மன்றத்தினரால் 18.4.83 அன்று போர்த்தப்பெற்றது.

31. சென்னை அசோக் நகர் ஸ்ரீதோபாஸ்வாமி சத்சங்கத்தில் 28.8.95 நடைபெற்ற ஸ்ரீ மீனாட்சி கல்யாணச் சொற்பொழிவின் போது ஸ்ரீ ஜயராமஜயரால் போர்த்தப்பெற்றது.

32. ஸ்ரீ முஷ்ணத்தில் நமது 378 வது ஸ்ரீராம பட்டாபிஷேகம் நடைபெற்றபோது ஸ்ரீதவக்கொடி அனந்தர் அவர்கள் 11.10.1997 அன்று பொன்னாடை போர்த்தி சிறப்புச் செய்தார்கள்.

33. நங்கநல்லூர் ஸ்ரீ ராகவேந்திர சுவாமிகள் 29.11.97 பரிமள மண்டபத்தில் பூஜ்ய ஸ்ரீ ரமணி ஐயர் அவர்கள பொன்னாடை போர்த்தி சிறப்புச் செய்தார்கள்.

34. நங்கநல்லூர் – தில்லைகங்கா நகர் ஸ்ரீ கருமாரியம்மன் கோயிலில் சிம்மவாகன நிதிக்காக நடைபெற்ற 382 வது ஸ்ரீ ராமபட்டாபிஷேகத்தின்போது 9.9.98 அன்று திரு. விஜயகுமார் அவர்களால் பொன்னாடை போர்த்தப்பெற்றது.

35. மதுரை S.S. காலனி சத்சங்கத்தில் நடைபெற்றுப் பூர்த்தியான 383 வது பட்டாபிஷேகம் 20.9.1998 அன்று மதுரை முன்னாள் கௌன்சிலர் திரு.கிருஷ்ணமூர்த்தி சால்வை போர்த்திச் சிறப்பித்தார்.

சென்ற 54 வருடங்களில் பல பொன்னாடைகள், தங்க மெடல்கள், பட்டங்கள் கிடைத்தன. அன்பர்கள் யாவருக்கும் என் மனமார்ந்த நன்றி, இனி இச்சிறப்புகளுக்குப் பதில் இயன்ற அளவு சன்மானம் மட்டும் செய்து அடியேன் செய்யும் நற்காரியங்களுக்கும் உதவ வேண்டுகிறேன்.

## 18. அடியேனது வருங்காலத் திட்டம்

மூப்புத் தலை காட்டுவதன் காரணமாக தளர்ச்சி ஏற்பட்டுள்ள ஆரம்பித்துள்ள போதிலும் இன்னும் சுமார் 4 வருடங்களுக்கு மக்களிடையே பிரசங்கம் செய்ய அடியேனுக்கு உடலில் இறைவன் உரத்தை அருளியிருக்கிறான் என நம்புகிறேன்.

நாட்டு மக்களிடையே நமது மத இலக்கியங்களுக்கான பிரசாரம் போதவில்லை, இராமாயணம்–பாரதம் போன்ற நூல்கள் நிறைய உள்ளன. எனவே இதுவரை போதுமான அளவு பிரசாரம் செய்யப் பெறாத பல நூல்களைப் படித்துக் குறிப்பெடுத்து (இராமாயணம் 48 தலைப்புகள் – திருவிளையாடற் புராணம் 12 தலைப்புகள் தவிர) சுமார் 108 தலைப்புக்களில் பல நூல்களைப் பற்றிப் பேசுவதற்காக அடியேன் தயார் செய்து கொண்டு வருகிறேன்.

பிற மதத்தினர் நம் மதத்திற்கு மாறி வரவேணுமேன்றும், நம் மதம் அதனால் விரிவாகப் பரந்து விளங்க வேணுமென்பதும் நமது மதத்தின் குறிக்கோள் அல்ல. மனிதன் எந்த மதத்தில் பிறக்கிறானோ அதிலிலருந்தே ஆண்டவனை அடைய முடியும்– எல்லா நதிகளும் கடலை அடைவது போல்– எல்லா வழிகளும் ஒரே தெய்வ சக்தியை அடைகின்றன எனப் பிற மதங்களையும் மதித்து நடப்பது இந்து மதத்தின் பெருமை.

எனவே நம் மத நூல்களை மக்களிடையே நன்கு பிரசாரம் செய்வதையே எனது வருங்காலத் திட்டமாக அமைத்துக் கொண்டுள்ளேன். எனது சேவையை நன்கு பயன்படுத்திக் கொள்ளுமாறு பாரத நாட்டிலுள்ள எல்லா ஸ்தாபனங்களையும் கேட்டுக் கொள்ளுகிறேன், சென்னை நகரத்தில் மட்டும் " வீடுதோறும் தெய்வீகக்கலை விளக்கம்" என்ற பிரசாரம் ஆரம்பிக்கிறேன். விவரம் எழுதியறிக.

சில ஸ்தாபனங்கள் ஆண்டுமலர்கள் போட்டு, அவைகளில் விளம்பரங்கள் வெளியிட்டு, ஒரு சில கட்டுரைகளுடன் பிரசுரிக்கின்றன. வருட முடிவில் அவைகள் பழைய காகிதங்கள் விற்கும் கடைகளுக்குச் செல்கின்றன. அன்பர்கள் சில விளம்பரங்களுடன், ஒரு நூலையே வெளியிட்டுவிற்றால் அது என்றும் இருக்கும். பல வருடங்கள் விற்பனை செய்யலாம். இலவச வினியோகத்தை தவிர்ப்பதுடன், மலர் விற்பனைகள் மூலம் அவரவர் ஸ்தாவனங்களுக்கு நிதி திரட்டலாம், அத்தகைய ஸ்தாபனங்கள் விரும்பினால் இலவசமாகப் புத்தகங்கள் எழுதி உதவுகிறேன். எனக்கு 100 பிரதிகள் அளிக்க வேணும். விவரம் எழுதி அறிந்தருள்க

அடியேன் பல காரியங்களுக்கு நிதி உதவிச் சொற்பொழிவுகள் செய்துள்ளேன். கோவில் திருப்பணிகள், அரசாங்க சம்பந்தமில்லாத கல்வி நிலையங்கள், தெய்வீக இலக்கிய ஸ்தாபனங்கள் அடியேனது சேவையைப் பயன்படுத்திக் கொள்ளலாம். விவரம் எழுதி அறிந்தருள்க.

## 19. என் சொற்பொழிவுகள் ஏற்பாடு செய்வதற்கான விவரங்கள்

எந்த ஊரில் எந்த விஷயம் பற்றி, எத்தனை நாள் பேச வேண்டுமென்ற விபரம் எழுதவும். நான் ஒரு உதவியாளருடன் வருவேன். இருவருக்கு வசதி செய்ய வேணும், போகவரச் சிலவும், ஊதியம் பற்றி அவ்வப்போது தீர்மானித்துக் கொள்ளலாம், சேவைதான் மிக முக்கியம்.

பட்டி மன்றம், வழக்காடு மன்றம் இவை நம் நூல்களின் தெய்வீக நிலையை குறைக்கும் என்பது என் எண்ணம். எனவே அவைகளுக்கு அழைக்க வேண்டாம். எனக்கு எளிய முறையில் தங்குதற்கும் ஆகார வசதிகளும் செய்தால் போதும்நல்ல விளம்பரத்துடன் எளிய முறையில் ஏற்பாடு செய்க. பல நூல்களில் குறிப்பெடுத்து சுமார் 108 விஷயங்கள் பற்றிப் பேச ஏற்பாடு செய்து கொண்டிருக்கிறேன் எந்த நூல் பற்றிப் பேசவேணுமானாலும் எழுதியருள்க.

அன்பர்கள் தங்களிடம் உள்ள தமிழ் நூல்களைப் பரிசாக அளித்து உதவினால் பிரசாரத்திற்கு உபயோகப்படுத்திக் கொள்ளுவேன். தமிழ் மணம்–பக்தி நெறி இவற்றைப் பரப்ப முழு மூச்சுடன் வேலை செய்வோம். இந்த அறிவிப்பைப் பிற நண்பர்களிடம் காட்டிப் பல இடங்களில் ஏற்பாடு செய்ய உதவவும், எல்லா சொற்பொழிவாளர்களும் இம்மாதிரி சேவை ஆரம்பித்தால் நம் புராதன மதம் மேன்மையடையும் ஆண்டவன் அருள்க.

## 20. பல பேரறிஞர்களின் ஆசிகள்

தங்கள் வினயத்தையும் பக்தியையும் பண்புகளையும் நான் மிகவும் பாராட்டுகிறவன், கம்பன் கவிதையைப் பரப்புவதைப் போன்ற புண்ணிய கைங்கரியம் வேறு என் புத்திக்குப் புலப்படவில்லை. உங்கள் வாக்குத்திறன் நாளுக்கு நாள் வளர்ந்தோங்க வேண்டுகிறேன்,

– நாமக்கல் ராமலிங்கம் பிள்ளையவர்கள் 7.1.1951.

கம்பராமாயணத்தை விளக்கி வருகிறீர்கள, நம்மவருக்கு ஆனந்தமாயிருக்கும், நல்ல சேவை, இறைவன் திருவருள்பாலிப்பானாக.

– ஸ்ரீ டி.கே. சிதம்பரநாத முதலியார் அவர்கள்
திருக்குற்றாலம் 26.4.1952.

கவிச்சக்கரவர்த்தி கம்பன் பாடல்களின் கவிதைச் சுவையை மக்களுக்கு ஊட்டும் துறையில் தாங்கள் முனைந்திருப்பதை அறிந்து மட்டிலா மகிழ்ச்சியடைகிறேன்.

– ஸ்ரீ தேசிக விநாகம் பிள்ளையவர்கள, புத்தேரி

வளமலியும் இராமகதைச் சுவையெல்லாம்
நனிவிரித்து வழங்கும் செம்மல்
உளமலியும் அன்புள்ளான் : சிவகதையும்
இனிதுரைக்கும் ஒருவன் ; யாரும்
அளவளவும் படிபழகும் நண்புடையான்:
இசையறியும் அண்ணல், பண்பும்
தெளிவுடைய வாக்குமிகப் பெற்றுடைய
பேராளன் தியாக ராசன்.

-வாகீச கலாநிதி ஸ்ரீ கி.வா, ஜகந்நாதன் அவர்கள்
ஆசிரியர், கலைமகள், சென்னை -4 (5.12.1977)

தங்களை என் இறுதிப் பருவத்தில் என் கம்பராமாயண வாரிசாக

மதிக்கிறேன். அதற்குத் தாங்கள் முற்றும் தகுதி வாய்ந்தவராக தழைத்தோங்க வேண்டுமென்பது என் ஆசையும் ஆசியும். தாங்கள் நான் எதிர்பார்த்தபடி விளங்கினால் அதுவே எனக்கு கைம்மாறும் குரு தட்சிணையும் ஆகும். நம்முடைய நட்புறவு ஒரு தனி ரகம், என்னைப் போல் வாழ்க்கையில் கடுமையான சோதனைகளுக்கு இராமபிரான் தங்களையும் உட்படுத்தியிருக்கிறார். நம்மாழ்வாரின் சீடரான மதுரகவி ஆழ்வார் பக்திப் பரவசமாகி வணங்கித் தம்மையும் அவருடன் பரமபதத்துக்கு அழைத்துச் செல்லுமாறு வேண்டிக் கொண்டாராம், அப்போது குரு சொன்னார் "உன்னைத் தவிர என் கொள்கையைப் பரப்ப வேறு யார் இருக்கிறார்கள்?" என்றார், அதே உணர்ச்சி ஏற்படுகிறது எனக்கும், (19.9.1978 நாளிட்ட கடிதம்) நான் அறிவுறுத்துவதன் காரணம் கதாரத்தினமாகிய தங்களை உள்ளவாறு மாற்றுக் குறையாமல் மதித்துள்ளேன் என்ற இரகசியத்தைப் பரசியமாக்கத்தான். தாங்கள் என் பணியைத் தொடர்ந்து மேற்கொள்ளுமாறு கம்பனுடைய இஷ்டமூர்த்தியான இராமபிரான் அருள்புரிவானாக.

–ஸ்ரீ பி. ஸ்ரீ ஆசார்யா அவர்கள், விட்டலாபுரம், 3.2.1979.

தமிழக முன்னாள் முதல்வர் திரு. எம். பக்தவச்சலம் அவர்கள் ஸ்ரீ ராமகதா தியாகராஜன் எழுதிய 'சுந்தரனுபூதி' விரிவுரை 'வேலுமயிலுந் துணை' என்ற நூலுக்கு எழுதிய முகவுரையில்.

ஸ்ரீ வி. தியாகராஜன் அவர்களைப் பல காலமாக அறிந்தவன் என்ற வகையில் அவருடைய தெய்வத் திருத்தொண்டை மனமாரப் பாராட்டி மகிழ்கின்றவர்களில் நானும் ஒருவன். அடக்கமும், ஆன்மீக உணர்வும், இரக்க சிந்தையும், ஈயும் பண்பும், உயர்ந்த உள்ளமும், ஒழுக்கச் சீலமும், பேச்சுத் திறனும் கொண்ட ஒரு நல்லவரால் அல்லாமல், வேறு எவரால் இத்தகு திருத்தொண்டை சிறப்புறச் செய்ய முடியும் என்று பலகாலும் எண்ணிப் பார்த்து இறும்பூ தெய்துகின்றேன். தெய்வீக வலிவோடு கருத்து வலிவு நிறைந்துள்ள இந்நூலுக்குள் தனித் தமிழ் மணம் வீசுவது உள்ளத்தைக் குளிர்விப்பதாகும். சிறுசிறு அத்யாயங்கள் மூலம், பெரிய பெரிய கருத்துக்களை விளக்கிச் சொல்ல வந்ததை நல்ல முறையில் சொல்லி படிப்போர்களைப் பேரின்பப் பித்தர்களாக்கி விடுகின்ற இந்நூலாசிரியரின் பேராற்றலை இவருக்குக் கிடைத்துள்ள சிறப்புப்பட்டங்களே மெய்ப்பிக்கின்றன.

செந்தமிழ்ச் செம்மல் – செஞ்சொற் செல்வர் – கம்பன் கவிநயச் செல்வர் திரு. எஸ். நல்ல பெருமாள் அவர்கள எழுதி வரும் 'கம்பன் காவிய சாரம்" கிட்கிந்தா காண்டத்திற்கு அடியேன் முகவுரையளித்தேன். அவர்கள் தனது முகவுரையில் "இன்று

தமிழகத்தில் கம்பராமாயணப் பாடல்கள். யாவையும் மனனம் செய்தவர், கம்பனே தமிழ், தமிழே உயிர் என்று வாழும் திருV. தியாகராஜன். அவர்களைத் தமிழகம் நன்கு பயன்படுத்தவில்லை, கம்பனின் சொல்லழகும், பொருளழகும் சுவையழகும் தெரிந்து மற்றவர்களுக்கும் திரிபின்றி பக்தியுடம் எடுத்துரைப்பதில் இவருக்கு ஒப்பாரும் மிக்காரும் இன்று தமிழகத்தில் இல்லை. அவரை அறியக் கிடைத்ததையே ஒரு பெரும்பாக்யமாகக் கருதகிறேன். பகட்டும் பணமும் விரும்பாத உத்தமர். ஆழ்கடலில் முத்து. ஸ்ரீ . பி.ஸ்ரீ ஆசாரியா, ஸ்ரீசா கணேசன், ஸ்ரீ.கி. வா. ஜகந்நாதன் அவர்களோடு நானும் சேர்ந்து இவருக்கு "கம்ப நாடகக் கலைஞன்" என்று பாராட்டி மகிழ்ந்தோம்.

Sri C. P. Ramaswami Aiyar (former Dewan of Travancore) and Vice Chancellor of the Annamalai University:-

"I was glad to have met you in Ooty and to have learnt about the details of the philanthrophic endeavours that you are combining with your Ramayana discourses" letter dt. 7.11.1945.

Sri V.V. Srinivasa Aiyangar, B.A., B.L., Retired High Court Judge, Madras wrote on 25.4.1950.

"When I learnt from your being engaged in delivering discourses. I was reminded of the passage in THAITHRIYOPANISHAD to the effect that the greatest THAPAS that a man can do in the world is learning for oneself and discoursing to others. We may remember in this connection that in discoursing on any subject you have to study for yourself in the best manner possible and that studying for one's self never completed until and unless one is able to discourse upon it to others. They are thus mutually interdependent and organically related.

Permit me to wish for your cultural work all success. : gressive prosperity and distinction.

# 21. அடியேனது எழுத்துப்பணி

1956 ல் கம்பராமாயணத்தின் பாலகாண்டப் பகுதியை "ஸ்ரீ ராமகதா சாகரம் (பால காண்டம்) என ஸ்ரீ ரிஷி கேசம் சிவானந்த சுவாமிகளின் முகவுரையுடன் வெளியிட்டேன் 2) "முருகன் திருவருள்" என்ற தலைப்பில் பங்களூர் அன்பர்கள் ஒரு சிறிய புஸ்தகம் எழுதி வெளியிட உதவினர்.3) " விநாயகன் பெருமை" 4)" சுவாமியே சரணம் ஐயப்பா" (இரண்டாவது பதிப்பு) இரண்டு புத்தகங்களை – கேரள தேசத்திலுள்ள வாசுதேவபுரம் ஸ்ரீ கிருஷ்ணன் திருக்கோயிலுக்கு எழுதியளித்தேன். ஸ்ரீ சுத்தானந்த பாரதியாரின் முகவுரையுடன் கூடிய ஸ்ரீ ராமகதா சாகரம் – சுந்தரகாண்டம்– வெளியிட்டேன்.

வருடாந்திரமலர் வெளியிடக் கூடிய ஸ்தாபனங்கள் விரும்பிக் கேட்டால் என்றைக்கும் விற்பனையாகும் படியான புத்தகங்களை எழுதி அளிக்கத் தயாராக உள்ளேன்.

5. வேலுமயிலுந்துணை என்ற தலைப்பில்கந்தரனுபூதி விளக்கம் எழுதி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார் ஸ்ரீ எம். பக்தவச்சலம் ஆகியவர்களுடைய முகவுரையுடன் வெளியாகிய புத்தகம் அன்பர்களின் நல்லலதரவைப் பெற்றுள்ளது. பொள்ளாச்சி ஸ்ரீ என் மகாலிங்கம் அவர்களுக்கு அர்ப்பணிக்கப்பட்டது.

சுந்தரனுபூதிப் பாடல்களுக்குச் சிறந்த முருக பக்தரான நூல் ஆசிரியர் ஸ்ரீ ராமகதாரத்ன வே, தியாகராஜன் உரை எழுதியுள்ளார். தமது எளிய இனிய அழகிய தமிழ் நடையில் முருகப் பெருமானையும் அவருடைய பக்தரான அருணகிரியாரையும் படிப்போர் முன் கொண்டு வந்து நிறுத்தி பக்திப் பரவச நிலைக்கு ஆளாக்கி விடுகிறார்.

– தமிழ்நேசன், மலேயா 2.11.1968.

ஐயப்பன் சரித்திரத்தை "சுவாமியே சரணம் ஐயப்பா" என்ற தலைப்பில் ஸ்ரீ சங்கரகிருபா பத்திரிகையில் தொடராக எழுதி முடித்து, கேரள முன்னாள் ஜில்லா நீதிபதி ஸ்ரீ சங்கர மேனோன் அவர்களின் முகவுரையுடன் வெளியிட்டு, மேற்படி நூலின் விற்பனைத் துகை பூராவும் சபரிமலைக்குச் செல்லும் ஏழையாத்திரிகர்களான சில கன்னி ஐயப்பன்மாருக்கு அளிக்கப்பட்டது. 2–வது பதிப்புப் பற்றி மேலே கூறியுள்ளேன்.

6. அடியேன் சொற்பொழிவுக்கு நடுவில் பாடும் பாடல்கள் தோத்திரமாலை என்ற பெயரில் வெளியாகியுள்ளது.

7. அடியேன், " பாவை அருளிய பாவை மாலை" என்ற தலைப்பில் வெளியிட்ட திருப்பாவை (ஸ்ரீ அனந்த ராமதீக்ஷதர் அவர்களின் முகவுரையுடன்) புத்தகமும் " சிவநாமம் கேட்பாய்செல்வி" என்று மகுடமிட்ட திருவெம்பாவை (ஸ்ரீ கிருபானந்த வாரியார் அவர்களின் முகவுரையுடன்) புத்தகமும், சுமார் 660 பக்கங்களில் ஸ்ரீமத் சம்பூர்ணராமகதாசாகரம் என்ற தலைப்பில் ஸ்ரீ கிருபானந்தவாரியார் அவர்களின் முகவுரையுடன் வெளியிட்ட பெரிய புத்தகமும், அதற்கு முன்னால் வெளியான பாலகாண்டம், சுந்தரகாண்டம் புத்தகங்களும் தீர்நது விட்டன, யார் கேட்டாலும் சில சிறு நிபந்தனைகளின் பேரில் பதிப்புரிமைதரத்தயார்.

"ஸ்ரீ லக்ஷ்மி நரசிம்ம உபாசகராகிய ஸ்ரீ கம்பரின் காவியத்தை மனம் உருக உபன்யசித்து வரும் சிறந்த பக்தர் ஸ்ரீ தியாகராஜய்யர். ஸ்ரீ வான்மீகி முனிவரின் காவியத்தை உணராதவர்கள்கூட ஸ்ரீ ஐயரின் கம்பராமாயணத்தை சிரவணம் செய்தாரேயாகில் முனிவரின் காவியத்திலும் பக்தி வந்துவிடும். அதற்குக் காரணம் இவர்களுடைய மனதில் வித்யாச மனப்பான்மையில்லாமல் கம்பரின் உள்ளத்தை அறிந்து அனுபவித்துக் கூறுவதேயாகும். இப்படிப்பட்ட பாகவதர் லட்சக்கணக்கான மனிதர்களின் க்ஷேமத்தைக் குறித்து, திருப்பாவைக்கு உரை எழுதியிருப்பது ஜனங்களின் பாக்யமேயாகும்:–. 'திருப்பாவை முன்னுரையில் உபன்யாச சக்ரவர்த்தி சேங்காலிபுரம் ஸ்ரீ அனந்தராம திட்சதர் அவர்கள் எழுதியது.

சமீபத்தில் பவானி தமிழாசிரியர்–புலவர் பெருமான், திரு.நீல. பகவன் அவர்கள் எழுதியருளிய "ஸ்ரீசெல்லியாண்டியம்மன் அந்தாதி" நூலுக்கு உரை எழுதும்பாக்யம் பெற்றேன். இம்மாதிரி நம் இலவச சேவையை அனைவரும் பயன்படுத்திக் கொள்ளலாம்.

## 22. சுந்தரகாண்டம் பற்றிய விமர்சனம்

"You have, by your succinct and illuminating comments, rendered valuable help to the readers. You have, at every stage,

pointed out the poetic achievements of Kambar and his supreme verbal felicity and adaptation of sound to sense.` Let me congratulate you on your effort and wish your ventures all success (Sir C P Ramaswami Aiyar, Avl, wrote on 20.10.1962 about our Sundarakandam.)

திரு. சா. கணேசன்
தலைவர், கம்பர் கழகம், காரைக்குடி.

சுருக்கவும் தெளிவுமான இந்நூல் கம்பன் காப்பியச் சொலையுள் நுழைவோர்க்கு மலைப்பேற்படாமல் செய்வதுடன் கம்பனை முழுவதும் கற்கவேண்டுமென்ற ஆர்வத்தையும் ஊட்டவல்லதாகும். இத்திருப்பணியிலே பேரார்வமுடன் ஈடுபட்டு, ஈட்டும் பெரும்பொருளை நல்லறத்திற்கே ஈந்துவக்கும் இந்நல்லார்க்கு எல்லாம்வல்ல பரம்பொருள் எல்லாம் நலனையும் அருள வேண்டும்.

7. கலியுகக்கம்பர் எனப் பெயர் பெற்ற மகாவித்வான் திரிசிரபுரம் ஸ்ரீ மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்களின் நூல்களை யாவரும் படித்து இன்புற வேண்டுமென்று கும்பகோணத்திலிருந்து வெளியாகும் “திருக்கயிலை” என்ற சஞ்சிகையில் தொடர் கட்டுரைகளாக எழுதி முடித்தேன் புத்தகமாக வெளியிடும் நன்னாளை ஆவலுடன் எதிர்நோக்குகிறேன்,

8. ஸ்ரீ ஆதிசங்கராச்சார்யாள் அருளிச் செய்த பஜகோவிந்தம். by ஸ்ரீ I.G.ராமநாதன்

9. ஸ்ரீ சுப்ரமண்ய புஜங்கம் ஸ்ரீமான் கோவை கவியரசு நடேச கவுண்டர் அவர்கள எழுதிய தமிழ் மொழி பெயர்ப்புப் பாடல்களுடன் கட்டுரைகள் வடிவில் உரை எழுதி வெளியிடப் பெற்றுள்ளன.

10. திருவிளையாடற் புராணத்தை “மதுரையின் மாண்பு' என்ற தலைப்பில் எழுதி ஸ்ரீ கி. வா. ஜகந்நாதன் அவர்களின் முகவுரையுடனும் ஸ்ரீ ஸ்ருங்கேரி மகா சன்னிதானம் அவர்களின் ஸ்ரீ முகத்துடன் வெளியாகியுள்ளது.

## 23. திருவளையாடற் புராண விமர்சனங்கள்

SIVA STORIES : Maduraiyin Manbu : The Author who is more known as a master of Kamban has brought out in this book, in a narrative form, the Thiruvilayadal Puranam. It conveys the episodes relating to Lord SIVA and his message and includes the familiar themes like the LORD helping a poor bard to save a devotee and defeat the arrogant musician in a contest. The incidents mostly centre round Madurai, which he describes, as the Capital of Tamil. The stories kindle the interest of the reader as the style adopted is simple and the language lucid.

HINDU dated 7.2.1984

11. திருத்தொண்டர் புராணத்தை அருள்மொழியமுது என்ற தலைப்பில் புத்தகமாக எழுதி இறைவன் திருவருளால் அது வெளியாகியுள்ளது.

## 24. மேற்படி புத்தகம் பற்றிப் பத்திரிகை விமர்சனங்கள்

இந்த நூலைப் பெரிய புராணத்திலுள்ள நாயன்மார்களின் கதை என்றோ சிறந்த ஆய்வு நூல் என்றோ, பெரியபுராணப் பாடல்களின் சிறந்த கோவை என்றோ கூறுவது பொருந்தும், மேலே உள்ள மூன்றும் செவ்வனே அமைந்துள்ளன. இலக்கியத்திற்காகவோ கடவுள் அடியார் அன்பு நெறிக்காகவோ பெரியபுராண மூல நூலை ஒருவர் படியாமல் இப்புத்தகத்தைப் படித்துச் சிந்தித்து விழைந்தவற்றைப் பெறலாம்.

– தினமணி 24.6.1985.

"என் வரப்பிரசாத அபிமான புதல்வர் ஸ்ரீ ராமகதா ரத்னம். வே. தியாகராஜன் அவர்கள் 'அருள் மொழி அமுது' என்ற நூலை எழுதி தமிழ் உலகுக்கு உதவினார்.

ஸ்ரீ கிருபானந்தவாரியார் சுவாமிகள்.

The long time exponent of Kambaramayanam Thyagarajan has now rendered in delightful prose (Tamil) the narration of Sekkilar. The style is easy and stately, worthy of the subject. Citations from the original are profuse and well chosen. The significance of the events and ideas is also well brought out with an understanding mind. There is no false note or falling from good taste any where. In short, the prose version is worthy of the original epic poem. The Hindu 27.8.1985.

12. என்னையாட்கொள்ளும் தெய்வமான ஸ்ரீ சிவகாமவல்லி சமேத நடராஜன் மூர்த்தியின், மூர்த்தி தீர்த்த தலவிசேடங்கள் பற்றி ஒரு புஸ்தகம் – பூஜ்ய ஸ்ரீ Dr. அ. ஆனந்த நடராஜதீட்சிதர்,M.A., B.O.L., Ph.D. அண்ணாமலை சர்வகலாசாலை தமிழ்த்துறைத் தலைவரது முகவுரையுடன் வெளியாகியுள்ளது. இப்புத்தகத்தின் (விலை ரூ.30) விற்பனைத் துகைபூராவும் தில்லை நடராஜப் பெருமானின் லட்சார்ச்சனைக்குச் சிலவு செய்யப்படவுள்ளது. அன்பர்கள் புத்தகத்தைப் படித்து இன்புறுவதுடன் ஸ்ரீ நடராஜப் பெருமானின் கருணைக்குப் பாத்திரராக வேண்டுகிறோம்.

“ஓம் சக்தி” 1991 தீபாவளி மலரில் அடியேனது வாழ்க்கை விவரம் வெளியிட்ட கட்டுரை ஆசிரியர் திரு,அருந்ததி அவர்கட்கும் ஆசிரியர் திரு. பகீரதன் அவர்கட்கும் நன்றி.

தினமணி கதிரில் “உள்ளத்தை தொட்ட உரையாளர்” என்ற தலைப்பில் அடியேனது வரலாற்றை வெளியிட்ட திரு, சங்கரிபுத்ரன் அவர்கட்கும் நன்றி. மற்றும் ஆசிரியர் அவர்கட்கும் நன்றி.

## 25. ஸ்ரீ ராமகதாசத் சங்கம்

ஸ்ரீ ராமபிரானை விக்ரக உருவில் வழிபட வேண்டுமென்று ஆவல்கொண்டு ஒரு விக்கிரகம் செய்து கோடி அர்ச்சனை செய்யவேண்டுமென்ற எண்ணம் உண்டாயிற்று. பல காரணங்களால் எனது புத்தக விற்பனைப் பணத்தை சொந்த உபயோகத்திற்கு எடுத்துக் கொள்ளாமல் எவர் ஒரு செட் புத்தகம் வாங்குகின்றார்களோ அவர்கள் பெயரால் ஒரு சகஸ்ரநாமம் செய்யத் தீர்மானித்தேன். தற்சமயம் 54 லக்ஷங்கள் ஆகியுள்ளன.

அன்பர்கள் நமது புத்தகங்களை வாங்கிப் பயனடைவதுடன்கோடி அர்ச்சனைக்கும் உதவ வேண்டுகிறேன் கோடி அர்ச்சனை செய்ய வேண்டும் என்பதற்காகவே ஸ்ரீராம கதாசத் சங்கம்'' என்ற சங்கம் நிறுவப்பட்டுள்ளது. தாய்மார்கள் அர்ச்சனை செய்வதற்காக சுமார் ரூ.2,000 செலவில் ஒரு ஜோடி வெங்கலக் குத்து விளக்குகள் வாங்கப் பெற்றது. தாய்மார்கள் இதுவரை 3 லட்சுமிலக்ஷார்சனைகளும் 1 சீதா லக்ஷார்ச்சனையும் செய்து முடித்துள்ளனர், ஸ்ரீராமகதாசத் சங்கத்திற்கு புதுக்கோட்டை, நாமக்கல், பாளையங்கோட்டை, கடலூர், ஸ்ரீரங்கம், மாயவரம் ஆகிய இடங்களில் கிளைகள் உள்ளன. நம் சொற்பொழிவுகளில் பழைய துணிகளை வசூல் செய்து சீர்செய்து ஏழைகளுக்குத் தருகிறோம். வருட ஆரம்பத்தில் ஏழை மாணர்களுக்குச் சீருடையும் புத்தகங்களும் வழங்குகிறோம். அதற்கான தனி நிகழ்ச்சிளை நடத்தி நானும் என் மனைவியும் மடியேந்திப் பணம் வசூல் செய்து இக்காரியங்களை நடத்துகிறோம். 50 கிளைகள் ஏற்படுத்த திட்டம். இறைவனின் அருள், அன்பர்கள் எம்பணிகளுக்கு ஆதரவு தருக. தற்சமயம் கிளைகளில் வேலை நிறுத்தப்பட்டுள்ளது.

நமது வெளியீடுகளின் விற்பனைத் துகையைக் கொண்டே ஸ்ரீ ராமபிரானுக்கும் ஏனைய தெய்வங்கட்கும் லக்ஷார்ச்சனைகள் செய்வதற்கு என்றே ஆரம்பித்த இச்சங்கம் ஏழைகளுக்குச் சேவை செய்ய திட்டமிட்டு சேவை செய்துவருகிறது.

அன்பர்கள் தங்கள் இல்லங்களில் நடைபெறும் விசேடங்களிலும் நம் பிரசங்கம் ஏற்பாடு செய்து இக்காரியத்திற்கு நிதி உதவலாம். இலவச நன்கொடை ஏற்றுக் கொள்ளப்படமாட்டாது.

தமிழ் வடமொழிகளில் லக்ஷார்ச்சனை செய்கிறோம். தலைமையகம் 54 ராமலக்ஷார்ச்சனைகள், 3 முருக லக்ஷார்ச்சனை இராமனுக்கு செய்துள்ளது.

சென்ற சில வருடங்களாக சென்னை குரோம்பேட்டையைச் சேர்ந்த அஸ்தினாபுரத்தில் இலவச வகுப்புக்கள் நடைபெற்றன. கம்பராமாயணம், திருவிளையாடற் புராணம் பூர்த்தியாயின.

தவிர சைதாப்பேட்டையில் சில நாட்கள் இலவச பெரியபுராண வகுப்புக்கள் நடைபெற்றன.

கிழக்குத் தாம்பரம் வான்மீகி தெரு சரஸ்வதி சத்சங்கத்தில் பெரிய புராண வகுப்பு நடைபெற்று முடிந்துள்ளது.

கம்பன் தன்காவியத்தை தில்லை நடராசப் பெருமான் திருமுன்னரும் ஸ்ரீரங்கம் ரங்கராஜபெருமாள் திருமுன்னரும் அரங்கேற்றினார். அந்த இரு தெய்வங்களுக்கும் சொந்தச் சிலவில் லட்சார்ச்சனை செய்ய விரும்பினோம். 30.7.1989 &18.8.96 இரண்டு தினங்கள் தில்லை மூவாயிவர் ஸ்ரீ நடராசப் பெருமானுக்கு ஒரே தினத்தில் லட்சார்ச்சனை செய்து உதவி ஆசி கூறியருளினர். அவர்கள்திருவடிகட்கு அடியேனின் வணக்கம். ஸ்ரீ ரங்கநாதப் பெருமானுக்கும் ஏகதின லட்சார்ச்சனை 30.3.1992 அன்று நம் இல்த்திலேயே பூர்த்தியாயிற்று.

## 26. அடியேனது பிரத்யேகப் பணி

சென்_ 50 வருடங்களில் பல தெய்வீக விஷயங்கள் பற்றி ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம், குண்டூசி, திருக்கோயில் போன்ற பத்திரிகைகளில் சுமார் 1,000 கட்டுரைகள் வரை எழுதியுள்ளேன், என்னிடம் சுமார் 800 கட்டுரைகள் பிரசுரமானவை உள்ளன. அன்பர்கள் எந்த விஷயமான கட்டுரைகளோ, புத்தகமோ கேட்டாலும் எழுதத் தயாராக உள்ளேன்.

## 27. அனைவருக்கும் நன்றி

சென்ற 55 வருடங்களாக ஏழைகள், பணக்காரர்கள் பலஸ்தாபனங்கள், ஞானிகள், கல்விமான்கள் அரசாங்கம் யாவரும் பல விதங்கஎிலும் என வாழ்வு வளம்பட உதவியுள்ளனர். அனைவருக்கும் என் நன்றி கலந்த வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

எந்தன் செந்தமிழ் எந்தன் செந்தமிழ் என்றும் புகழ்வேனே!
எந்தாய் மொழியென எந்தாய் மொழியென என்றும்
மகிழ்வேனே!

ஸ்ரீ சீதாராமர் திருவடிகளே சரணம்!
குருவின் கருணை என்றும் காக்க!

**மங்களம்**

இந்த புத்தகம் வெளியானபின் நடைபெற்ற நிகழ்ச்சிகள்.
சென்னையில் 392. 393. 394. 395வது ராமாயணங்கள் நடைபெற்றன

## பட்டங்கள்

நங்கநல்லூர் திருக்குறள் பேரவையினர்
"அன்னைத்தமிழின் அருட்தொண்டர்" பட்டம்
26.3.2001 அன்று அளித்தனர்.
புதுக்கோட்டை - கம்பன் கழகத்தினர்
26.7.2002 அன்று "கம்பன் மாமணி"
பட்டமளித்து சிறப்பித்தனர்.

## பொன்னாடைகள்

சென்னை அண்ணாநகர் ஸ்ரீ V.நாராயண ஐயர் டிரஸ்ட்
16.3.2002 மீனாட்சி கல்யாணம் சொற்பொழிவு
ஏற்பாடு செய்து பொன்னாடை போர்த்தி
சிறப்புச் செய்தருளினார்கள்.
சென்னை ஜாபர்கான்பேட் ஸ்ரீகுருஜி முரளிதரசுவாமிகள்
"குசேலர் சரிதை" ஏற்பாடு செய்து 22.8.2002 அன்று
பொன்னாடை போர்த்திச்சிறப்புச் செய்தருளினார்கள்.
கேளம்பாக்கம் "சம்ரக்ஷணா"வில் நடைபெற்ற
395வது இராமாயணம் பூர்த்தியானபோது பூஜ்யஸ்ரீ
சிவசங்கர் பாபா அவர்கள் 4.12.2002 பொன்னாடை
போர்த்தி ஆசி கூறியருளினார்கள்.

சென்னை இந்துமிஷன் நடத்திய "திருத்தொண்டர்புராணம்
கட்டுரை போட்டிக்கு ரூ.1000/- பரிசளித்தனர்.

சென்னை அசோக் நகரிலிருந்து வெளியாகும்
MAKE HISTORY பத்திரிக்கையில நம் சேவைப்பற்றி
விரிவாகக் கட்டுரை வெளியிட்டு ஆசி கூறியருளினர்.
சென்னை வனிதா பதிப்பகத்தின் "நீதி நூல்" என்ற
நம் புத்தகத்தை தஞ்சை சர்வ கலா சாலை முன்நாள்
தலைவர் திரு.அ.ச.ஞானசம்பந்தம் அவர்களின்
முகவுரையுடன் வெளியிட்டு அருளினர்.
இது நமது 18வது புத்தகம்.

நம் சேவைகள் நன்கு நடைபெறவும் பல நற்காரியங்களுக்கு
நன்கொடையளிக்கவும் இறைவனருளை வேண்டுகிறோம்
சென்ற 60 வருடங்களாக நமக்கு ஆதரவளித்து வரும்
அன்பர்கள் அனைவருக்கும் நன்றி.

அடியேனுக்குத் தெய்வீகத் துணையாயிருந்து ஆதரவு காட்டிய தர்மாத்மா - பூஜ்யஸ்ரீ வைத்ய சுப்ரமண்ய ஐயர் தம்பதிகள் இந்தக் கல்யாண மண்டபத்தில் 30-7-62 முதல் 14-8-62 வரை அடியேனது 174வது ராமாயணச் சொற்பொழிவு ஏற்பாடு செய்து அந்நாள் மந்திரி M. பக்தவச்சலம் அவர்கள் தலைமையில், செட்டிநாட்டரசர் ஸ்ரீ முத்தையாச் செட்டியார் அவர்களைக் கொண்டு பொன்னுடை போர்த்தி கௌரவித்தனர். அடியேன் அந்நாள் முதல் பேரும் புகழும் பெற்று வாழ்கிறேன். இதே மண்டபத்தில் அடியேனது அபிமான வரப்பிரசாத புதல்வன் சிரஞ்சீவி. K. நடராஜன் சௌ. சாரதா (லலிதா) அவர்களின் திருமணம் 9-11-1997 அன்று நடைபெற்று அவர்களும் மிக மிக சௌக்யமாக உள்ளனர். ராசியான இம்மண்டபத்தில் நற்காரியங்களைச் செய்து அனைவரும் நீடூழி வாழ வேண்டுகிறேன்.

ஸ்ரீ ராமகதாரத்ன V. தியாகராஜன்
ஆஸ்தான வித்வான் ஸ்ரீ ஸ்ருங்கேரி சாரதா பீடம்.

உ

ஸ்ரீ சீதாராமஜெயம்

## வாழ்த்து

எங்கள் அருமை அன்பர் ஸ்ரீ ராமகதா ரத்ன **வே. தியாகராஜன்** அவர்களின் தமிழ்ப்பணி மேன்மேலும் சிறக்கவும் விரைவில் அவரது 400வது ஸ்ரீமத் கம்பராமாயணச் சொற்பொழிவு நிறைவேறவும் இறைவனை வேண்டி வணங்கி வாழ்த்துகிறோம்.

N. **சிவகுமார்**

---